# திருமண வைபவம்



செங்கோட்டை பிரபல செல்வந்தரும், வெள்ளாளங்குளம் பொய்கை மிட்டாதாருமான, ஸ்ரீ M. சுப்பிரமணியக் கரையாளர் அவர்கள் ஜேஷ்ட புத்திரி சௌபாக்கியவதி தங்கம்மாளுக்கும், பாளையங்கோட்டை அட்வோகேட் J. சக்கரபாணி நம்பியார் அவர்கள் ஜேஷ்ட புத்திரன், சிரஞ்சீவி C. ஜெகந்நாதன், எம். ஏ. அவர்களுக்கும் செங்கோட்டையில் வைத்து ஜூன் மாதம் 7-ம் தேதி காலை 11-30 மணிக்கு, அழகாக அலங்கரிக்கப்பட்ட பந்தலின் நடுவே அமைந்த கலியாண மேடையில் திருமணம் இனிது நடைபெற்றது. அன்று மாலை நடந்த தோட்டக் கச்சேரிக்கு பல பிரபுக்களும், பிரமுகர்களும், சமஸ்தான உத்தியோகஸ்தர்கள் பலரும் வந்திருந்தனர். வந்திருந்த விருந்தினர்களை திருவெண்காடு சுப்ரமண்யம் அவர்கள் தன்னுடைய நாதஸ்வர இனிமையால் மகிழ்விக்கச் செய்தார். அன்றிரவு 9-மணிக்கு கோகிலகான இசை வாணி M. S. சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. பதினாயிரத்துக்கு மேற்பட்ட மக்கள், அவர்களின் இனிய தேவகானத்தைக் கேட்டுப் பரவச மடைந்தனர். மறுநாள் நகர்வலத்தின் பொழுது திருவெண்காடு சுப்ரமண்யம் நாதஸ்வரமும், நீடாமங்கலம் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை தவுலும் வாசித்தனர். கலியாண நாட்களில் பதினாயிரத்துக்கு அதிகமான ஏழை மக்களுக்கு அன்னம் அளிக்கப்பட்டது. தம்பதிகளுக்கு கணக்கற்ற வெகுமதிகளும் எண்ணற்ற வாழ்த்துச் செய்திகளும் கிடைக்கப் பெற்றன.

பர்க்மயர்
பெல்டிங்குகள்

தொழிற்சாலைகளின் உற்பத்திகளையும் யந்திர
முயற்சிகளையும் அதிகப்படுத்துகின்றன.

பர்க்மயர் பிரதர்ஸ் லிமிடெட்.,
ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர்

மைசூர் சமஸ்தானம், சென்னை, காக்கிநாடா
முதலிய இடங்களுக்கு ஏஜெண்டுகள்

வில்லாண்டர்ஸ் அர்பத்நாட் & கோ.,
முதல் லைன் பீச், த. பெ. 261, மதராஸ்

# கல்கி
## பொருளடக்கம்


மலர் 2 இதழ் 33 | 1943 ஜூன் 20 | சுபானு ஆனி 6



| | | |
|---|---|---|
| **அரசியல்** | | |
| என்ன சேதி? | ... | ... 7 |
| பஞ்சம் வருகிறது! | ... | ... 11 |
| **இலக்கியம்** | | |
| படித்துப் பார்! | .... | ... 46 |
| **கதைகள்** | | |
| பூந்தோட்டம் | ரவீந்திரநாத் டாகுர் | ... 17 |
| என்ன ஆகுமோ? | "வஸந்தன்" | ... 24 |
| சாதுரியக் கதை | ... | ... 28 |
| ரகசியத்தைச் சொல்லுங்கள் | "ஸோமாஸ்" | ... 28 |
| உடைந்த வளையல் | கு. ப. ரா. | ... 33 |
| என் தெய்வம் | "கல்கி" | ... 41 |
| **கட்டுரைகள்** | | |
| கர்நாடக சங்கீத வித்வான்கள் | வைத்தியநாத பாகவதர் | ... 16 |
| பையன் இருந்தால் சொல்லுங்கள்! | "நாடோடி" | ... 22 |
| குற்றால வாசம் | "பூரி" | ... 29 |
| **கேட்டுப் பாருங்கள்!** | ... | ... 15 |
| **பாப்பா மலர்** | ... | ... 38 |
| **பல சரக்கு** | | |
| வட்ட மேஜை | ... | ... 15 |
| காலக்ஷேபம் | ... | ... 37 |
| அரட்டைக் கச்சேரி | ... | ... 46 |
| **கார்ட்டூன்** | | |
| நிகழ்ச்சிச் சித்திரம் | உம்மன் | ... 8 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.




★ பழங் காலத்திய தமிழ் நூல் எதைப் புரட்டினாலும், நகர வர்ணனையில் 'மாட மாளிகை கூட கோபுரம்' என்ற வார்த்தைகள் வராமற் போகுங் ககப்படுவதில்லை. மாட மாளிகையும் கூட கோபுரமும் மக்கள் வாழ்வில் அவ்வளவு உயர்வான இடம் பெற்றிருக்கின்றன. மாட மாளிகைகள் நாட்டின் செழிப்பிற்கும் செல்வத்திற்கும் அறிகுறியாக இருப்பது போலவே, கூட கோபுரங்கள் மக்களின் கலைச் செழிப்பிற்கும் பக்திச் செல்வத்திற்கும் அடையாளமாக விளங்குகின்றன. இப்படி, கோபுரங்கள் எல்லா விதத்திலும் உயர்வாயிருக்கக் கொண்டுதான் குரங்குகளுக்குக் கூட அவைமேல் பிரியம் விழுந்திருக்க வேண்டும். படத்தில் காணப்படுவது காஞ்சி கைலாச நாதர் கோயில் கோபுரம். பல்லவ சாம்ராஜ்யம் உன்னத நிலையிலிருந்த காலத்தில் கட்டப்பட்ட இக் கோபுரத்தின் சிகரம் அக் காலத்துத் தமிழ்ச் சிற்பிகளின் கைத்திறனுக்கும் மேதைக்கும் சிறந்த சின்னமாக விளங்குகிறது.

போட்டோ: எஸ். ராஜம்.

| இரண்டாவது வாரம்! | ஜூபிடர் தயாரிப்பு |
|---|---|

குபேர சம்பத்து — காய கல்பம் — கிருஷ்ணன் மாயக் கூத்து

சென்னை பாரகளில் ஜூன் மாதம் 19-ம் தேதி முதல்

**எவ்வளவு நாளானாலும் மறக்கமுடியாத**

**அவ்வளவு பெரிய படம்**






# குபேர குசேலா




இரண்டாவது வாரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதுரை | — | சிந்தாமணி | திருச்சி | — | வெலிங்டன் |
| திருநெல்வேலி | — | ராயல் | பெங்களூர் | — | சிவாஜி |
| விருதுநகர் | — | ராதா | கும்பகோணம் | — | ராஜா |
| காரைக்குடி | — | நடராஜா | கோயமுத்தூர் | — | ராஜா & டைமண்ட் |

டைரக்ஷன் : R. S. மணி, B. S. ராமையா — ஸ்டுடியோ : நியூடோன்

சென்னை நகர உரிமையாளர் : தி சந்திரா டாக்கீஸ் லிமிடெட், மதராஸ்

ஸௌத் இந்தியா பிக்சர்ஸ் ரிலீஸ்

"குபேர குசேலா" பாட்டுக்களை "கொலம்பியா" ரிகார்டுகளில் கேளுங்கள்.




# கல்கி

மலர் 2 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 33


# என்ன சேதி?

## வழி காட்டுகிறார்!

நம்மில் பலர் அடிக்கடி ஒரு விஷயத்தைப் பற்றித் தீவிரமாக யோசனை செய்கிறோம். "நம்மிடம் ஐந்து லட்சம் ரூபாய் இருந்தால் அதை என்ன வழியில் செலவு செய்வது?" என்று மூளையை வறட்டிக்கொண்டு சிந்திக்கிறோம். இப்படியெல்லாம் கஷ்டப்பட்டுச் சிந்திப்பதற்கு அவசியம் இல்லாமற் போகவில்லை. ஏனெனில், இந்த யுத்த காலத்தில் எத்தனையோ பேர் திடீர் திடீரென்று லட்சாதிபதிகளாக ஆகிக் கொண்டிருக்கிறார்கள்! மனது வைத்தால் நாம் கூட ஒரு ஐம்பது லட்சம், அறுபது லட்சம் சம்பாதித்து விடலாம். உண்மையில், இந்தக் காலத்தில் பணம் சம்பாதிப்பது ஒரு பிரமாதமான காரியமேயில்லை. ஆனால், எது கஷ்டம் என்றால், சம்பாதிக்கிற பணத்தைச் சரியான வழியில் செலவழிப்பதுதான்! அதற்குத்தான் தீர்க்காலோசனை வேண்டும்; மூளையை வறட்டிக்கொண்டு யோசிக்க வேண்டும். அத்தகைய கஷ்டத்தை நமக்கு வைக்காதபடி, கோட்டையூர் பாரிஸ்டர் ராம, அழகப்ப செட்டியார் ஐந்து லட்சம் ரூபாயைச் செலவு செய்வதற்கு ஓர் அருமையான வழியை நமக்கெல்லாம் காட்டியிருக்கிறார். அண்ணாமலை சர்வகலா சாலையில் இயந்திரத் தொழிற் கல்வி போதிப்பதற்காக அவர் ஐந்து லட்சம் ரூபாயும் அதற்கு மேல் திருஷ்டி பரிகாரத்துக்கு ஒரே ஒரு ரூபாயும் நன்கொடை யளித்திருக்கிறார். அவருடைய நெசவு ஆலை இருக்கும் இடமாகிய கொச்சி புதுக்காட்டில் இருந்து கொண்டு அண்ணாமலை சர்வகலாசாலை உப அத்தியட்சகரை வரவழைத்து, "இந்தாரும் ஐந்து லட்சம்!" என்று ரொக்கமாகத் தூக்கிக் கொடுத்திருக்கிறார். உப அத்தியட்சகரும் மன மகிழ்ந்து வாங்கிக் கொண்டு பத்திரிகைகளுக்கெல்லாம் மேற்படி விவரத்தை மகிழ்ச்சியுடன் அறிவித்திருக்கிறார்.

## வாழ்த்துகின்றோம்!

நமது தேசத்தில் பிரிட்டிஷார் ஆரம்பித்து வைத்த கல்வி முறையானது நம்மையெல்லாம் குமாஸ்தா வேலைக்குத்தான் லாயக்கு ஆக்குகிறது என்று வெகு நாளாகப் புகார் கூறி வந்திருக்கிறோம். நம் நாட்டிலுள்ள எல்லாச் சர்வ கலா சாலைகளும் மேற்படி திருத் தொண்டைத்தான் நாளது வரையில் செய்து வருகின்றன. ஆனால் அண்ணாமலை சர்வ கலாசாலை மட்டும் குமாஸ்தாக்களை உற்பத்தி செய்வதுடன் சில தீவிர பொது உடைமை வாதிகளையும் தயார் செய்து வந்திருக்கிறது. இனிமேல் அந்தச் சர்வ கலா சாலையில் குமாஸ்தாக்களையும் பொது உடைமை வாதிகளையும் தவிர, உடைமைகளை உற்பத்தி செய்யக்கூடிய தொழில் நிபுணர்களும் உற்பத்தியாவார்களென்று எதிர் பார்க்கலாம். எல்லாத் தானங்களிலும் சிறந்தது கல்வி தானமாகும். அதிலும் சிறந்தது இயந்திரத் தொழிற் கல்விக்குச் செய்யும் தானம் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். ஸ்ரீ அழகப்ப செட்டியாரின் இந்த மகத்தான நன்கொடையானது கொடுத்தவருக்குப் பெருமை தருவதுடன், வாங்கிக் கொண்ட சர்வ கலாசாலையையும் பெருமைப் படுத்துகிறது. அதனால் எத்தனையோ மாணாக்கர்கள் பயன்



தேச பக்தர்களின் அக்ஞாத
வாசத்தைப் பயன்படுத்திக்கொண்டு
அங்கங்கே அநாமதேய மந்திரிகள்
கிளம்பிக்கொண்டிருக்கிறார்கள்.
பொது ஜன
மந்திரி சபை.




ஸிந்து மாகாண
மந்திரி டாக்டர்
ஹேமன்தாஸ் ஹிந்து
மகா சபையுடன் முஸ்லிம்
லீகை ஒன்று சேர்த்து
வைக்க முயற்சி செய்துவருகிறாராம்




சென்னையிலும்
பொம்மை மந்திரி
சபை அமைப்ப
தற்கு டாக்டர்
வரதராஜுலு
நாயுடு
பிரயத்தனம்
செய்து
வருகிறார்
ஏழைக்கு
இரங்கு
ங்கள்!
சர்க்கார்
மாளிகை.

-உம்மன்

உணவுப் பஞ்சத்தையும் துணிகிராக்கியையும் சமாளிக்க சர்க்கார் திட்டங்கள் வெளிவந்த வண்ண மிருக்கின்றன.

காகிதக் குண்டுகள்

உணவுப் பஞ்சம்

துணிக் கிராக்கி

அரசாங்கம்

பிரஞ்சு சாம்ராஜ்ய நிர்வாகம் சம்பந்தமாக மீண்டும் கிராடுக்கும்-டிகாலேக்கும் சண்டை ஆரம்பமாகி யிருக்கிறது.

டிகாலே

கிராடு

பிரஞ்சு சாம்ராஜ்யம்

இதை மாட்டிக்கொண்டு போனால் அவர்கள் என்மேல் கல்லை விட்டெறிகிறார்களே!

பரவாயில்லை, இன்னொரு தடவை போய்ப்பாரேன்.

இந்த உபயோகமற்ற யுத்தத்தை நிறுத்துங்கள்! நாம் எல்லோரும் சமாதானமா யிருப்போம்!

ஸ்பெயின் சர்வாதிகாரி பிராங்கோ சமீபகாலத்தில் செய்யத்தொடங்கிய சமாதானப் பிரசாரம் பலன் தரவில்லை

அடைந்து, நாட்டுக்கே பெருந் தொண்டு இயற்றப் போகிறார்கள். கொடுத்த வரை வாழ்த்துவதுடன், பெற்றுக் கொண்டவர்கள், பயனடையப் போகிற வர்கள் எல்லாருக்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைக் கூறுகிறோம்.

## காகிதப் பஞ்சம் ●

**ப**ள்ளிக்கூடங்களில் எல்லாம் வருஷத்துக்கு வருஷம் பாட புத்தகங்களை மாற்றும் வழக்கம் ஒன்று இருந்து வருகிறது. "இப்படி வருஷத்துக்கு வருஷம் புஸ்தகத்தை மாற்றி எங்கள் கழுத்தை அறுக்கிறார்களே! மூத்த பையன் வாசித்த புஸ்தகத்தை இரண்டாவது பையனுக்குக் கொடுக்க முடியவில்லையே!" என்று பெற்றோர்கள் வருஷா வருஷம் அழுது கொண்டு வந்தார்கள். ஒரே வகுப்பில் ஒரு வருஷத்துக்கு இரண்டு வருஷமாகப் படிக்கும் மாணவர்கள் கூட, வருஷத்துக்கு வருஷம் புதுப் புஸ்தகங்கள் படித்துத் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்று கஷ்டப்பட்டார்கள்!

ஆனால், இந்தப் புகார்களை யெல்லா அதிகாரிகள் காதில் போட்டுக் கொள் இல்லை. பாட புத்தகம் எழுதுகிறவ கள் — பிரசுரிப்பவர்களின் வாழ்த்து களையும், பெற்றோர் — மாணுக்க களின் சாபங்களையும் வாங்கி மூட்ட கட்டிக்கொண்டு வந்தார்கள். (பண தையும் மூட்டை கட்டியதாக முணு முணுத்தவர்களும் உண்டு.)

நல்ல வேளையாக இந்தக் காகித பஞ்சம் பெற்றோர்களுக்கும், மாணவ களுக்கும் உறுதுணையாக வந்து விட்டது காகிதப் பஞ்சத்தை யொட்டி, பள்ளி கூடங்களில் பாட புஸ்தகங்களை மா றக்கூடாது என்று சர்க்கார் உத்தர போட்டுள்ளனர். பேஷான காரிய தான்! ஆனால் பாட புஸ்தகங்களை மாற்றக்கூடாது என்று சொன்ன வர்கள், இன்னும் ஒரு அடி முன்னே "பரீட்சைக் கேள்விகளையும் மாற்ற கூடாது, போன வருஷத்துக் கேள்வி தாள்களைத்தான் இந்த வருஷமு கொடுக்க வேண்டும்" என்று உத்தர போட்டார்களானால் எவ்வளவு ப பேஷாக இருக்கும்!

# பஞ்சம் வருகிறது!

சென்னை மாகாணத்தை ஆட்சி புரியும் மகா மேன்மை தங்கிய அட்வைஸரி கவர்ன்மெண்டாருக்குச் சொல்லுகின்றோம்.

இந்த மாகாணத்தை நோக்கிப் பயங்கரமான பஞ்சம் வந்து கொண்டிருக்கிறது. அதைத் தடுப்பதற்குத் தகுந்த வழிகளை மேற்படி 'ஆலோசனை சர்க்கார்' புத்தியைச் செலுத்தி ஆலோசிக்க வேண்டும். தங்களுக்குத் தெரியாத விஷயத்தில் தகுந்தவர்களிடம் யோசனை கேட்க வேண்டும். கேட்டு, தகுந்த நடவடிக்கைகளை உடனே கையாள வேண்டும். இப்படியெல்லாம் செய்யா விட்டால், சென்னை மாகாணத்தின் மக்கள் பஞ்சத்தின் கொடுமைகளை அநுபவிக்க வேண்டி நேரிடும். அவர்களுடைய துன்பங்களுக்கெல்லாம் இந்த அட்வைஸரி கவர்ன்மெண்டார் பொறுப்பாளியாவார்கள்.

பஞ்சத்தைத் தடுப்பதற்கு இப்போது சென்னை அதிகார வர்க்கமானது சிற்சில முறைகளைக் கையாண்டு வருகிறது என்பதை நாம் அறிவோம். ஆனால் இந்த முறைகள் வண்டியை முன்னால் வைத்து மாட்டைப் பின்னால் பூட்டுவதாகவும், தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிப்பதாகவும், நுனி மரத்திலிருந்து அடிமரத்தை வெட்டுவதாகவும் இருக்கின்றன என்பதைச் சொல்லவேண்டியிருக்கிறது. பஞ்சத்தைத் தடுப்பதற்குப் பதிலாக அவை பஞ்சத்தைத் துரிதப் படுத்தக் கூடியனவாயிருக்கின்றன. சுருங்கச் சொன்னால், அவை ''சர்வ முட்டாள் தனமான முறைகள் !''

சென்னை அட்வைஸரி கவர்ன்மெண்டாரின் நல்ல நோக்கத்தை நாம் சந்தேகிக்கவில்லை. இந்த மாகாண ஜனங்களைப் பஞ்சம் பிடிக்கக்கூடாது என்ற நல்ல நோக்கம் அவர்களுக்கு இருக்கத்தான் செய்கிறது. அட்வைஸர்களில் ஒருவரான ஸர் ஹியூ ஹூட் சென்ற வாரத்தில் பம்பாய்க்குப் போய் விட்டு வந்து பத்திரிகை நிருபர்களிடம் சில விஷயங்களைத் தெரிவித்தார். தானியக் கட்டுப்பாடு முறைகள் சம்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டாருக்கும் சென்னை கவர்ன்மெண்டாருக்கும் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருக்கிறதாம். சென்னை மாகாணத்தின் நன்மைக்கு விரோதமான எந்தக் காரியத்தையும் சென்னை கவர்ன்மெண்டார் நடக்க விட மாட்டார்களாம். — இவையெல்லாம் 'கூடமாக' அட்வைஸர் ஹூட் தெரியப்படுத்தினார்.

அவர் சொல்வதை நாம் நம்புகிறோம். சென்னை மாகாண மக்களின் நலத்துக்காகச் சென்னை கவர்ன்மெண்டார் இந்தியா கவர்ன்மெண்டுடன் போராடுவதை அறிந்து வியக்கிறோம். இந்திய சர்க்கார் நமக்கு இன்னும் என்ன புதிய தீமையைச் செய்ய விரும்புகிறார்கள், சென்னை சர்க்கார் அதைத் தடுக்க எந்த விதமான போராட்டம் நடத்துகிறார்கள் — இதெல்லாம் நமக்குத் தெரியாது. எனினும், நமக்காகப் போராடுகிற சென்னை அட்வைஸரி கவர்ன்மெண்டின் நோக்கத்தை நாம் பாராட்டுகிறோம்.

ஆனால், மிக மிக நல்ல நோக்கத்துடனே நமது ஆலோசனை சர்க்கார் செய்யும் காரியங்களும் இந்த மாகாணத்துக்குப் பெரிய அபாயத்தைக் கொண்டு வருவனவாயிருக்கின்றனவே என்பதுதான் நமக்குப் பெரும் கவலையை அளிக்கின்றது.

சென்னை சர்க்கார் முறைகள் எந்த விதத்தில் பிசகானவை என்பதைக் கவனிக்கு முன், தற்போதைய நிலைமை என்ன, அதன் காரணங்கள் யாவை என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

இந்தச் சென்னை மாகாணத்தில் இப்போது அரிசி முதலிய உணவு தானியங்களுக்கு மிகுந்த கிராக்கி ஏற்பட்டிருக்கிறது.

'கிராக்கி' என்னும்போது இரண்டு விதமான கிராக்கியையும் குறிப்பிடுகிறோம்.

(1) உணவு தானியங்களின் விலை ரொம்பவும் கிராக்கியாகியிருக்கிறது.

(2) உணவு தானியங்கள் தேவையான அளவு கிடைக்காத கிராக்கியும் ஏற்பட்டிருக்கிறது.

தானியங்களின் விலை கிராக்கியாவதற்குத் தேச முழுவதற்கும் பொதுவான

சில காரணங்கள் இருக்கின்றன. யுத்தத் தேவைகளை முன்னிட்டுச் சர்க்கார் ஏராளமான காகித நோட்டுக்களை அச்சிட்டு வழங்குவதால், எல்லாப் பொருள்களும் விலை ஏறுகின்றன. அது போலவே அரிசி முதலிய தானியங்களின் விலையும் ஏறுகின்றது.

ஆனால், உணவுப் பொருள் கிடைக்காத கிராக்கி ஏன் ஏற்பட்டிருக்கிறது?

ஏற்கெனவே, சென்னை மாகாணத்தின் தேவைகளுக்கு, இந்த மாகாணத்திலே விளைந்த அரிசியைத் தவிர, பர்மாவிலிருந்து அரிசி இறக்குமதியாகிக் கொண்டிருந்தது.

பர்மா அரிசி இறக்குமதி இப்போது அடியோடு நின்று விட்டது.

எனவே தற்சமயம் சென்னை மாகாணத்தில் விளையும் நெல் இந்த மாகாணத்தின் தேவைகளுக்குக் கொஞ்சம் குறைவாகத்தான் இருக்கும்.

இதுதான், அரிசி கிடைக்காத கிராக்கிக்கு முக்கிய காரணம்.

ரயில் வசதி குறைவாயிருப்பது, வியாபாரிகள் கொள்ளை லாபம் சம்பாதிக்க விரும்பிச் சேர்த்து வைப்பது — இவையெல்லாம் துணைக் காரணங்கள்.

ஆகவே, அரிசி கிராக்கியைப் போக்குவதற்கு முக்கியமாகச் செய்ய வேண்டிய காரியம் என்ன?

சென்னை மாகாணத்தில் நெல் விளைவை அதிகமாக்க வேண்டும்.

இந்த மாகாணத்துக்கு வேண்டிய நெல் முழுதும் இங்கேயே விளைவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

கோதாவரியும் கிருஷ்ணாவும் காவேரியும் பாயும் சென்னை மாகாணம் ஏற்கெனவே பர்மாவிலிருந்து அரிசி இறக்குமதி செய்யும்படி இருந்ததே பெரிய அவமானமாகும். — சர்க்காருக்குத்தான் சொல்கிறோம்.

அந்த அவமானத்தைப் போக்கிக் கொள்வதற்கு இது நல்ல சமயம்; அருமையான சந்தர்ப்பம்.

புதிய நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வரவேண்டும். ஏற்கெனவே ஒரு போக சாகுபடியாகும் நிலங்களை இரு போக மாக்க வேண்டும். இரு போக நிலங்களில் மூன்று போகம் சாகுபடி செய்யப் பண்ண வேண்டும்.

இப்படியெல்லாம் நெல் சாகுபடியையும் மற்ற தானியங்களின் சாகுபடியையும் பெருக்கி, பர்மாவிலிருந்து வந்த அரிசிக்கு ஈடு செய்ய வேண்டும்.

இதுதான் முதன்மையாகவும், முக்கியமாகவும் செய்ய வேண்டியது. இதைச் செய்தால்தான் இம்மாகாணத்தைப் பஞ்சத்திலிருந்து பாதுகாக்கலாம். இதுதான் அரிசி கிராக்கியைப் போக்குவதற்கு மார்க்கம்.

இம் மாகாணத்திற்கு வேண்டிய தானியம் முழுதும் இம் மாகாணத்தில் விளைந்தால் — ரயில் போக்கு வரத்து வசதிகளையும் ஓரளவு ஏற்படுத்திக் கொடுத்தால் — விலைவாசிகள் எல்லாம் தானே சீர்ப்பட்டுச் சரியான நிலைமைக்கு வந்து விடும். விலைவாசிக் கட்டுப்பாட்டுக்கு அவசியமே இராது.

ஆனால், அரிசி கிராக்கியைப் போக்குவதற்கு இப்போது சென்னை அதிகார வர்க்கத்தார் கையாளும் முறைகள் என்ன?

அந்த முறைகளினால் விவசாயம் அதிகமாகுமா? அரிசி முதலிய தானியங்கள் அதிகமாக உற்பத்தியாகுமா? அதுதான் இல்லை: — அதற்கு நேர் மாறாக, அதிகாரவர்க்க முறைகளினால் தானியங்களின் விளைவு குறையும் என்று நாம் பயப்படுகிறோம். அதனால் தானிய கிராக்கி அதிகமாகுமென்று அஞ்சுகிறோம். அதன் பலனாகப் பயங்கரமான பஞ்சம் இம் மாகாணத்தைப் பீடிக்கலாமென்றும் கவலையுறுகிறோம்.

* * *

விவசாயம் என்பது மந்திரமல்ல; மாஞ்செடி முளைக்க வைக்கும் தந்திரம் அல்ல. விவசாயத்துக்கு இன்றியமையாத சில சாதனங்கள் வேண்டும்.

விவசாய சாதனங்களுக்கெல்லாம் இப்போது அளவில்லாத கிராக்கி ஏற்பட்டிருக்கிறது.

விவசாயத்துக்கு முதன்மையாக உழவு மாடுகள் வேண்டும்.

உழவு மாட்டின் விலை இப்போது ஒன்றுக்கு மூன்று ஆகியிருக்கிறது.

முன்னே, ஐம்பது ரூபாய்க்கு ஒரு ஜதை உழவு மாடு வாங்கலாம். இப்போது ரூ. 150 கொடுத்தால்தான் வாங்கலாம்.

(மாட்டு கிராக்கிக்கு ஒரு காரணம், பட்டாளங்களுக்காக—ஸோல்ஜர்களின் உணவுக்காக — அடிமாடுகள் வாங்கு வதுதான் என்று கூறப்படுகிறது.)

இன்னும், உழவு மாடு காற்றைப் புசித்துக் கொண்டு வேலை செய்யாது.

மாட்டுக்குத் தீனி வைக்க வேண்டும். பருத்திக் கொட்டை, பிண்ணாக்கு, தவிடு வைக்க வேண்டும்.

பருத்திக் கொட்டை விலை முன்னே விசை ஒன்றே முக்காலணா; இப்போது ஆறு அணா.

பிண்ணாக்கு விலை முன்னம் விசை ஒன்றே காலணா; இப்போது நாலு அணா.

தவிடு விலை முன்னம் மூட்டை நாலணா; இப்போது ஒன்றரை ரூபாய்.

(தவிடு, பட்டாளத்துக்குப் பிஸ் கோத்துக்காக வாங்கப் படுகிறது என்று சொல்லப்படுகிறது.)

விவசாயத்துக்கு மாட்டைத் தவிர மண்வெட்டி, ஏர், ஏற்றச்சால் முதலியவை வேண்டும்.

முன்னர் ஒரு மண் வெட்டியின் விலை அணா 12; இப்போது அதே மண் வெட்டியின் விலை ரூ. 4—4—0.

மண் வெட்டிக்குப் போடும் இரும்புப் பூணின் விலை முன்னர் அரையணா; இப்போது அதே பூணின் விலை நாலு அணா!

இப்படியெல்லாம் விவசாயத்துக்கு வேண்டிய — அத்தியாவசியமான — பொருள்கள் எல்லாம் அசாத்தியமாய் விலை ஏறியிருக்கின்றன.

விவசாயிகளின் வாழ்வுக்கு அவசிய மான துணிமணி, மண்ணெண்ணெய் முதலியவற்றின் கிராக்கியைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

* * *

விவசாயம் எப்போதும் கஷ்டமான தொழில்; பெரும்பாலும் நஷ்டம் வரும் தொழில். அந்தத் தொழில் இப் போது இன்னும் பன்மடங்கு கஷ்ட மாயும், நஷ்டமாயும் ஆகியிருக்கிறது.

எனவே, இச்சமயத்தில் விவசாயம் வளர வேண்டுமானால்—சாகுபடி அதிக மாக வேண்டுமானால் — தானிய உற்பத்தி பெருகி இம் மாகாண ஜனங் களுக்கு வேண்டிய உணவு முழுதும் கிடைக்க வேண்டுமானால் — விவசாயி களின் கஷ்ட நஷ்டங்களைக் குறைக்க வேண்டும். பல விதங்களிலும் அவர் களுக்கு ஊக்கமளிக்க வேண்டும்.

ஆனால், நடப்பது என்ன?

அதிகார வர்க்கத்தின் தானியக் கட்டுப்பாடு விதிகள் விவசாயியின் கழுத்தை இன்னும் நெருக்குவதற்கே உபயோகமாகின்றன.

இந்த விதிகளில் எல்லாம் பெரிய கழுத்தறுப்பு விதியாயிருப்பது, ஜில்லா வுக்கு ஜில்லா தானியம் போவதைத் தடை செய்திருப்பதாகும்.

இந்தக் கட்டுப்பாடு எவ்வளவு அர்த்தமற்றது, நிஷ்பலனானது என்ப தைப் பற்றிச் சென்ற இதழில் எழுதி யிருந்தோம். இதன் பின்னர், தென் னிந்திய வர்த்தகச் சங்கத்தாரும் ஜில்லாத் தடையைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றியிருக் கிறார்கள்.

இந்த ஜில்லாத் தடை விதியினால் நன்மை கிடையாது என்பது மட்டு மல்ல; அதனால் பெரிய விபரீதமான தீமையும் இருக்கிறது.

நெல் வியாபாரம் படுத்து விட்டது. ஒரு பக்கத்தில் விவசாயிகளிடம் உள்ள நெல் அப்படியே கட்டுக்கிடையாய்க் கிடக்கிறது.

இன்னொரு பக்கத்தில், ஜனங்கள் பணத்தை வைத்துக்கொண்டு 'லபோ லபோ' என்று அரிசிக்கு அடித்துக் கொள்கிறார்கள்.

இது என்ன பயங்கரமான மூடத் தனம்?

விவசாயிகளிடம் அதிகப்படியாக உள்ள நெல் உடனுக்குடனே விற்றால் அல்லவா, அவர்கள் மேலும் மேலும் ஊக்கமாக விவசாயத்தில் ஈடுபடு வார்கள்? நெல் நல்ல விலைக்கு விற்றால் அல்லவா, ஏகக் கிராக்கியாகியிருக் கும் விவசாய சாதனங்களை வாங்கி அவர்களால் விவசாயம் செய்ய முடியும்?

இப்போதோ, சர்க்கார் கட்டுப்பாடு களினால் நெல் விற்பனை தடைப்படு கிறது. இதனால் விவசாயிகளின் கையில் அவசியமான சமயத்தில் பணம் இருப்பதில்லை. இதன் பயனாக, விவசாய சாதனங்களை அவர்கள் சரி யான தருணத்தில் வாங்க முடிவ தில்லை. இதனாலெல்லாம் விவசாயம் தடைப்படுமென்று சொல்ல வேண் டியதில்லை.

இவ்வாறு, இப்போதுள்ள சர்க்கார் தானியக் கட்டுப்பாட்டு விதிகளினால், நாம் விரும்புவதற்கு நேர்விரோதமான விபரீத பலன்கள் ஏற்படுகின்றன.

விவசாயமும் தானிய உற்பத்தியும் அதிகமாவதற்குப் பதிலாகக் குறைகின்றன!

மேற்படி விதிகளினால் ஏற்பட்டிருக்கும் இன்னொரு விபரீதக் கேட்டைக் குறிப்பிட விரும்புகிறோம்.

மாட்டுக்கு உணவாகிய பருத்திக் கொட்டை -- பிண்ணாக்கு விலை அசாத்தியமாயிருக்கிறபடியாலும், நெல்லை விற்பது சிரமமாயிருக்கிறபடியாலும் தஞ்சை ஜில்லா விவசாயிகள் சிலர் நெல்லைக் குத்தி, அரிசியும் உமியுமாகக் கலந்து, மாட்டுக்கு வைக்கிறார்களாம்!

சில இடங்களில் மனிதர்கள் "அரிசி அரிசி" என்று அலறிக் கொண்டிருக்கையில், வேறு சில இடங்களில் இவ்விதம் மனிதர்களுக்கு உணவாகக் கூடிய அரிசியானது, மாட்டுக்கு உணவாக்கப்படுகிறது!

அதிகார வர்க்கத்தின் குருட்டுக் கட்டுப்பாட்டு விதிகளே மேற்கண்ட விபரீதத்துக்குக் காரணம் என்று சொல்ல வேண்டியதில்லை.

இந்த பயங்கரமான உணவுச் சேதத்தை நிறுத்த வேண்டுமானால், அர்த்தமற்ற மௌடீக தானியக் கட்டுப்பாட்டு விதிகள் போக வேண்டும்.

எல்லாவற்றுக்கும் முதலில், இந்த மாகாணத்துக்குள்ளே ஜில்லாவுக்கு ஜில்லா அரிசி போவதை எவ்விதத் தடையுமின்றி அநுமதிக்க வேண்டும்.

விவசாய சாதனங்களின் விலைகளைக் குறைக்க முயல வேண்டும். இன்னும் பல விதங்களிலும் விவசாயம் வளர ஊக்கமளிக்க வேண்டும்.

இந்த வருஷத்தில விவசாயத்துக்கு இயற்கை இடையூறுகள் வேறு ஏற்பட்டிருக்கின்றன.

கோடை காலத்தில் நன்செய் வயல்கள் நன்றாய்க் காய்ந்து வெடித்தால்தான், மாரி காலத்தில் நெல் நன்றாய் விளையும். இந்த வருஷம் கோடையில் பலமான மழை பெய்து நன்செய் வயல்கள் எல்லாம் நனைந்து போய்விட்டன.

ஆகையால், வழக்கமான விளைச்சலுக்கு ஒன்றுக்கு முக்கால் வீதந்தான் இந்த வருஷம் விளையும் என்பது நிச்சயம்.

மற்றும், மேற்படி அகால கோடை மழையினால் பல இடங்களில் சோளம் முதலிய தானியங்களும் பயிர் செய்ய முடியாமல் போய்விட்டது.

ஆகவே, வருகிற வருஷத்தில் எல்லா வழிகளிலும் விவசாயமும் விளைச்சலும் குறையப் போகின்றன. இப்போதைவிட விளைவு குறைந்தால், இம் மாகாணம் பயங்கரமான பஞ்சத்துக்கு ஆளாக நேரும் என்பதில் சந்தேகமில்லை.

ஆகவே, மேன்மை தங்கிய சென்னை அட்வைஸரி கவர்ன்மெண்டார் உடனே கண் விழித்தெழுந்து ஜனங்களை வரப்போகும் பஞ்சத்திலிருந்து காப்பாற்றத் தக்க வழிகளைத் தேட வேண்டும்; அல்லது உண்மையான ஜனப் பிரதிநிதிகளிடம் ஆட்சியை ஒப்புவித்து விட்டு விலகிக் கொள்ள வேண்டும்.

இந்த இரண்டில் ஒன்று செய்யாவிட்டால், இன்றைக்கு அவர்களைக் கேட்பார் ஒருவரும் இல்லாவிட்டாலும், நாளைக்குக் கடவுளின் முன்னிலையில் அவர்கள் பதில் சொல்லியே தீர வேண்டியிருக்கும்.

# வட்ட மேஜை

ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்
உபாத்தியாயர்கள் சங்கம்
சென்னை
15—6—43

அன்புள்ள ஐயா,

எங்கள் பள்ளிக்கூடம் புது வருஷத்துக் ...ரகத் திறக்கப்பட்ட 11—6—43 அன்று ...பாத்தியாயர்கள் சங்கத்தின் விசேஷக் ...ட்ட மொன்று நடந்தது. அதில் பின்வரும் ...ர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப் ...ட்டது. அதை மிக்க மகிழ்ச்சியுடன் தங்க ...நக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்:

"தமிழ் நாட்டின் மிக்க பிரபல முன்னேற் ...ப் பத்திரிகையான 'கல்கி'யின் ஆசிரிய ...க்கும், அவருடைய திறமையுள்ள உதவி ...ளர்களுக்கும் இப் பள்ளிக்கூட உபாத்தி ...யாயர்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள் ...ங்கள் மனமார்ந்த வந்தனத்தைத் தெரி ...த்துக் கொள்ளுகிறார்கள். இவ் வருஷ ...ல்கியின் ஜூன் மாத முதல் தேதி இதழில் ...ம் பள்ளிக்கூடத்தைப் பற்றிச் சிறந்த ...ாராட்டுதல் வெளி வந்திருந்தது. அத் ...டன் நமது தலைவரான குருகுல தர்ம ...ச்சாரிய ஸ்ரீ கே. ரங்கசாமி அய்யங்கார் ...., ஏ., பி. எல்., எல். டி. அவர்கள் தலைமை ...யில் நடந்த வேலூர் கல்வி மகாநாடு சம்பந்த ...மாக நம் பள்ளிக்கூடம் செய்த வேலையைக் ...வர்ச்சிகரமான முறையில் எடுத்துக் ...காட்டப் பட்டிருந்தது. மகாநாட்டைப் ...ற்றி மிக ருசிகரமாகவும், தெளிவாகவும் ...ழுதப்பட்டிருந்த கட்டுரையை மிகவும் ...ாராட்டுகிறோம். இக் கட்டுரையினால் ...பாது ஜனங்கள் உபாத்தியாயர்களைப் பற்றி ...யர்ந்த அபிப்பிராயம் கொள்ள ஏது ...வானதுடன், உபாத்திமைத் தொழிலின் ...க்கியத்துவம், பெருமை, புனிதத்தன்மை ...வற்றையும் ஜனங்கள் உணரலாயிற்று."

தங்கள் அன்புள்ள

டி. எஸ். சூரியநாராயண அய்யர்
பி. ஏ., எல். டி.
காரியதரிசி

[நமது திறமையுள்ள உதவியாளர்கள் ...வனிக்கவும்! உபாத்தியாயர்களிடம் இந்த ...ரதிரி நற்சாட்சிப் பத்திரங்களை அவர்கள் ...மறும் மேலும் வாங்கி நமக்குப் பெருமை ...ளிக்க வேண்டும்! —ஆசிரியர்.]



# கேட்டுப் பாருங்கள்

21உ. திருச்சி ரேடியோவில் சாத்தூர் சுப்பிரமண்யத்தின் கச்சேரி.

பழைய பிரபல வித்வான்களில் பாதிப் பேர் திருவாங்கூருக்குப் போய்த் தொண்டையை இழந்து விட்டார்கள்; பாக்கிப் பாதிப் பேருக்குத் திருவாங்கூர் போகாமலே தொண்டை கட்டிப் போய் விட்டது! இப்படிப்பட்ட இக்கட்டான நிலைமையில், தமிழ் நாட்டில் சில இளம் வித்வான்கள் பிரமாதமாக முன்னணிக்கு வந்து கொண்டிருப்பது மிகவும் சந்தோஷமான விஷயம். அவர்களில் சாத்தூர் சுப்பிரமண்யம் ஒருவர். இதுவரை கேளாதவர்கள் இந்தத் தடவை ரேடியோவில் அவசியம் கேட்டுப் பாருங்கள். அப்புறம் நேரிலும் தக்க பக்க வாத்தியங்களுடன் கேளுங்கள்.

22உ. சென்னையில் ஸ்ரீமதி ஆர். வசுந்தரா தேவி பாடுகிறார்.

அன்று திருச்சியில் 1-40க்கும் 5-மணிக்கும் ஸ்ரீமதி செல்லம் வீணையில் தமிழிசை பொழிகிறார்.

23உ. சென்னையில் லீலா — சரோஜினி பாட்டு கேட்க வேண்டியது.

24உ. சென்னையில் இளம் மேதாவி எஸ். பாலசந்திரன் ஸிதார் வாத்தியத்தை அற்புதமாய்க் கையாளுவதையும் கேட்க வேண்டும்.

அன்று திருச்சியில் மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலப் பிள்ளையின் கச்சேரி.



26உ. சென்னையில் குன்னக்குடி வெங்கடராமய்யர் கச்சேரி.

அன்று 2-30க்கும் இரவு 10 மணிக்கும் ஸ்ரீ எஸ். பாலசுப்பிரமண்யம் என்னும் இளம் பாடகர் பாடுகிறார்.

28உ. திருச்சியில் செம்பை வைத்தியநாத பாகவதர் கச்சேரி. (திருவாங்கூருக்கும் போகாமல் தொண்டையும் பறிபோகாமல் இருக்கும் பழைய வித்வான் இவர் ஒருவர் பாக்கி யிருக்கிறார்.)

29உ. சென்னையில் ஆலத்தூர் சகோதரர்கள் கச்சேரி. — இந்தச் சகோதரர்களின் புகழ் நாளுக்கு நாள் உயர்ந்து வருகிறது. சென்னை ரேடியோவிலும் ஒரு படி உயரும் என்று எதிர்பார்க்கலாம். பக்க வாத்தியங்கள் மட்டும் நன்றாய் அமைய வேண்டும்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் "மூன்று கண்கள்" என்னும் தலைப்புடன் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: கே. ராஜேந்திரன், அயினாவரம்.

# கர்நாடக சங்கீத வித்வான்கள்

ஆலங்குளம் வைத்தியநாத பாகவதர்

## 28. ஜகன் மோஹன சித் விலாஸ ஸபா

கும்பகோணத்தில், தமிழ் தேசத்தில் நாடகத்தை வெளிப்படுத்துவதற்கு யத்தனம் செய்து, அதற்கு வேணுமென்கிற தக்க மனிதர்களைப் பொறுக்கி எடுத்து, முதல் முதலில் நாடகத்தை வெளியிட்டவர் பிரும்மஸ்ரீ நடேச தீக்ஷிதர் அவர்களே யாவர். இவர் தஞ்சை அரண்மனை வைத்தியரும் வித்வானுமா யிருந்தபடியால், ஒரு சமயம், கோலாப்பூரிலிருந்து வந்து தஞ்சை அரண்மனையில் நடத்தின மஹாராஷ்ட்ர டிராமாவைப் பார்க்கும்படி நேர்ந்தது. அதில் இவர் மிகவும் ஈடுபட்டுத் தாமும் தமிழ் தேசத்தில், அம்மாதிரி ஒரு டிராமா ஸெட் தயார் செய்து நடத்தவேண்டுமென்ற பேரவாவுடன் முயற்சிசெய்து அதன் பிரகாரம் நடத்தின மகா புருஷர்! அவர் ஆரம்பித்த இந்த சித்விலாஸ சபாவைக் கல்வியில் சிறந்தவர்களும், கானத்தில் சிறந்தவர்களும், அலட்சியமாய் உபன்யாஸம் செய்யச் சக்தி வாய்ந்தவர்களும் சேர்ந்து மிகவும் பரிமளிக்கச் செய்தார்கள்.

இன்றும் அழியாத பெயருடன் விளங்குகிற எஸ். கல்யாணராம ஐயர் அவர்கள் (ஸ்திரீபார்ட்), கோனேரி ராவ் அவர்கள் (ராஜபார்ட்), ராக்ஷஸ பார்ட்டில் மகா கியாதி அடைந்த ராமஸ்வாமி ஐயர் அவர்கள், உடாணி வைரம் போல் சாரீரத்தை வகித்துத் தேனைக் காட்டிலும் ருசியுடன் பாடிய தேப்பெருமாநல்லூர் வைத்தியநாதய்யர் அவர்கள் எல்லோரும் சேர்ந்து இந்த சபாவில் உழைத்து எல்லையில்லாப் புகழை அடைந்தார்கள்.

அந்த நாளில் ஸ்ரீ கல்யாணராம ஐயர் அவர்களால் நாடகத்திற்கென்று எழுதப்பட்ட 'ஸ்ரீராமாயணம்' 'சாகுந்தலம்' முதலான சரித்திரங்களின் வசனங்கள் பல கம்பெனியார்களால் இன்னும் கையாளப்பட்டு மிக்க அழகாக விளங்கி வருகின்றன. ஸ்திரீ ஜாதியாய்ப் பிறந்தவர்கள் கூட சி. எஸ். கல்யாணராம ஐயர் அவர்கள் நடிப்பது போல், ஸ்திரீகளின் பாவாபிநயங்களை நிரூபணம் செய்ய முடியவே முடியாது. ஒரு சமயம் பரீக்ஷார்த்தமாகத் திண்டுக்கல்லில் பகலிலேயே இவர் வேஷம் தரித்து வெளியில் சஞ்சாரம் செய்தார். ஆனால் ஒருவராலேயும், இவர் வேஷதாரி என்று கூற முடியவில்லை என்றால், இவர் நடிப்பின் திறமை எவ்வளவு உயர்ந்தது என்பதை நன்கு ஊகிக்கலாம். சமீப காலத்தில் ஸ்திரீ பார்ட்டில் புகழுடன் விளங்கிய கே. எஸ். அனந்தநாராயணய்யர் அவர்களிடத்தில் கல்யாணராம ஐயர் அவர்களுடைய ஞாபகத்தை உண்டு பண்ணக்கூடிய அம்சங்கள் இருந்து வந்தன.

சங்கீத மில்லாமல் கேவலம் பிரவசனத்தினாலேயே, சர்வ ஜனங்களும் மெய் மறந்து கண்ணீர் விடும்படி செய்யக் கூடிய சக்தியைப் பெற்றவர் ராஜபார்ட் கோனேரி ராவ். இவரைப் பகலில் பார்த்தால்கூட ராஜா மாதிரிதான் இருப்பார். தேப்பெருமாநல்லூர் வைத்தியநாதய்யர் கானத்திற்குப் பிறகு அப்பேர்ப்பட்ட கானத்தின் ஞாபகத்தை உண்டுபண்ணி, அந்தப்பக்தாவை நாடகத்தில் நாம் மறக்காம லிருக்கும்படி செய்து, அவரைக் காட்டிலும் அதிக ருசியுடன் நாடகத்தில் பாடி மிக்க புகழுடைந்தவர் ஸ்ரீ எஸ். ஜி. கிட்டப்பா அவர்கள் ஒருவர்தான் என்று திண்ணமாய்க் கூறலாம்.

---

## போதும், போதும்!



போலிஸ்காரன்:—யார் ஐயா இவ்வளவு வேகமாக மோட்டாரை ஓட்டுகிறது? உம் பெயர் என்ன?

மோட்டார் ஓட்டும் செட்டியார்:—என் பெயர் அழ...பழ...கழ...சித...ராம...

போலீஸ்:—போதும், போதும்......இந்த இடத்தை விட்டுச் சீக்கிரமாய்ப் போங்கள்!

# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திரநாத் தாகூர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி

## பதினோராம் அத்தியாயம்
## "அந்த நீரு எங்கே?"

● ரமேன் கதவருகில் நின்றபடியே, "மன்னி, கூப்பிட்டாயா என்ன?" என்றான். நீரஜா, அடைத்துவரும் தன் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு "ஆமாம்! வாயேன்" என்றாள்.

அறையில் விளக்கே இல்லை. ஜன்னல் திறந்திருந்தது. படுக்கையின்மேல் சந்திரிகை படிந்திருந்தது; அது நீரஜாவின் முகத்திலும், அவள் தலைப்புறமாக இருந்த ஆதித்தியன் அளித்த, 'லாபர்னம்' பூங்கொத்தின் மீதும் விழுந்தது. மற்றவையெல்லாம் தெளிவாகப் புலப்படவில்லை. திண்டின்மேல் சாய்ந்தவாறு நீரஜா பாதி எழுந்து உட்கார்ந்திருந்தாள்; ஜன்னலுக்கு வெளியே அவளுடைய கண் உலாவிக் கொண்டிருந்தது. அப்பொழுது காற்று சிறு தென்றலாக வீசத் தொடங்கியது. மரக் கிளைகள் மெல்ல ஊசலாடின; இலைகள் துடித்தன; மாம்பூவின் மணம் கும்மென்று வீசியது. தொலைவில் எங்கோ மத்தளத்தின் மெல்லொலியும் பாட்டுக் குரலும் கேட்டன; வண்டிக்காரர்கள் வசிக்கும் வீதியில் ஹோலி பண்டிகையின் கோலாஹலம். ரமேன் நாற்காலியை இழுத்துக்கொண்டு கட்டில் அருகிலே அமர்ந்தான். அழுகை தன்னை மீறி வந்து விடுமோ எனப் பயந்து நீரஜா வெகு நாழிகை வரை எந்தப் பேச்சும் எடுக்கவில்லை. அவளுடைய உதடு நெளிந்து துடித்துக் கொண்டிருந்தது. கண்டத்துள் வேதனையின் புயல் சூழ்ந்து வருவதுபோல் இருந்தது. ஆனால் சில நிமிஷங்களுக்குள் அவள் சமாளித்துக் கொண்டாள். அதன் விளைவு 'லாபர்னம்' பூங்கொத்திலிருந்து இரண்டொரு இதழ்கள் அவளது உள்ளங் கையில் நசுங்கிக் குழைந்தன. அப்புறம் ஒன்றும் பேசாமலே ஒரு கடிதத்தை எடுத்து ரமேனின் கையில் கொடுத்தாள்.

அது ஆதித்தியன் எழுதியது. அதில் கண்டிருந்தது:—

"இத்தனை நாள் நாம் அன்யோன்யமாகப் பழகிய பின்னர் இன்று திடீரென என்னிடத்தில் நீ சந்தேகம் கொள்ளவேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. இந்த விஷயத்தைக் குறித்து விவாதிப்பது எனக்கு ரொம்ப அவமானமாயிருக்கிறது. இப்போதிருக்கும் உன் மன நிலையில் நான் எது பேசினாலும், எது செய்தாலும், விபரீதமாகவே எடுத்துக் கொள்வாய். காரணமற்ற இந்த வேதனை ஏற்கனவே நலிந்திருக்கும் உன் தேகத்தை ஒவ்வொரு நிமிஷமும் பிழிந்து கொண்டே இருக்கிறது. ஆகையால் உன் மனம் அமைதியுறும் வரை நான் ஒதுங்கியே இருப்பதுதான் நல்லது.

உன்னுடைய விருப்பம் என்ன? ஸரளாவைத் தோட்ட வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டும். இதுதானே நீ விரும்புவது? நீக்கிவிட வேண்டியதுதான். நானும் யோசனை செய்து பார்த்தேன்; அது மாதிரி செய்வதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உரைப்பேன். நான் படித்து, ஒரு மனிதனாகி முன்னுக்கு வந்ததெல்லாம் ஸரளாவினுடைய பெரியப்பாவின் தயவினால்தான். நான் கடைத்தேறுவதற்கான வழியைக் காட்டியவர் அவரே. அவருடைய அன்பிற்குப் பாத்திரமான ஸரளாவுக்கு இந்த உலகத்தில் இங்கு வேறு எவருமே இல்லை. ஆகையால் இன்று அவளை நடுத் தெருவில் நிற்க வைப்பது அதர்மமாகும். உன் மேல் எனக்கு அளவு கடந்த காதல் இருப்பதற்காக நான் அவளை நிர்க்கதியாக விட்டுவிட முடியாது.

"எவ்வளவோ ஆலோசனை செய்த பிறகே நான் இந்த முடிவுக்கு வந்தேன். நம்

இழுத்து எறியப் பார்ப்பார்கள்! யாரை நாம் தூஷிப்பது?" என்றான்.

"இல்லை, உன்னால் சகித்துக் கொள்ள முடியும். அன்று ஒரு நாள் நடந்த விஷயம் என் ஞாபகத்திற்கு வருகிறது. உன் தலையில் அப்போது தலை மயிராவது தலை மயிர்! அவ்வளவு இருந்தது. இப்போதும் குறைவில்லை. அந்தச் செறி குழலுக்குச் சொந்தக்காரி யென்ற கர்வம் உனக்கு ரொம்ப உண்டு. ஒருநாள் உனக்கும் எனக்கும் என்னவோ சிறு பிள்ளைத்தனமான சண்டை உண்டாயிற்று. அன்று பகல் கூந்தலைத் தலையணைமேல் விரித்து விட்டு நீ அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாய். நான் மெல்லக் கத்திரிக்கோலை எடுத்துப் பாதியளவிற்குக் கூந்தலைக் கத்திரித்து விட்டேன். நீ உடனே விழித்துக் கொண்டாய். உன் கருமையான கண்கள் பின்னும் கறுத்து ஒளிர்ந்தன. 'என் கர்வத்தைப் போக்கத்தானே இந்த வேலை?' என்று சொல்லி விட்டு நீ என் கையிலுள்ள கத்திரியைப் பிடுங்கிக்கொண்டு மட மடவென்று கழுத்து மட்டம் மயிரை வெட்டித் தீர்த்து விட்டாய். உன்னைப் பார்த்தவுடன் உன் பெரியப்பா பிரமித்துப் போனார். 'இதென்ன கோலம்!' என்றார். நீயோ முகத்தில் துளியாவது வருத்தம் காட்டாமல் 'ரொம்ப இறக்கமா யிருக்கு' என்று பதில் சொல்லி விட்டாய். அவரும் சிரித்து விட்டு அதை ஒரு வேடிக்கையாகவே பாவித்தார். கோபித்துக் கொள்ளவில்லை; வையவில்லை. கத்திரியை எடுத்து உன் கூந்தலை ஒழுங்காக ஒரு மட்டமாய் வெட்டி விட்டார். உனக்கேற்ற பெரியப்பாதானே!"

ஸரளா சிரித்து, "என்ன புத்தி உனக்கு! அப்படி நான் செய்தது உன்னிடம் மன்னிப்பைப் பெறுவதற்காகவென்று நினைத்தாய் போலும்! ஒரு காலும் இல்லை. அன்று என் கர்வத்தை அடக்க நீ செய்ததைவிட இன்னும் எத்தனையோ மடங்கு அதிகமாக உன் செருக்கை நான் குலைத்து விட்டேனே; இல்லையா சொல்லு?" என்றாள்.

"வாஸ்தவமே. கத்திரித்த அந்தத் தலை மயிரைக் காணும்போதெல்லாம் எனக்கு அழுகையாக வந்தது. உன் முகத்தைப் பார்க்க எனக்கு லஜ்ஜையாகவே இருந்தது. படிக்கும் அறையில் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். நீ உள்ளே வந்து என் கையைக் கர கரவென்று பிடித்திழுத்து ஒன்றுமே மனத்தில் வைக்காமல் தோட்ட வேலையைக் கவனிக்க என்னை அழைத்துச் சென்றாய். இன்னொரு நாள் நடந்த விஷயமும் எனக்கு ஞாபகம் வருகிறது. அது ஒரு சித்திரை மாதம்




"ஸரளா, என்ன அற்புதமாய் இருக்கிறாய்!..."

நடந்தது. ஒரு நாள் அகாலத்தில் பலத்த காற்றடித்து மழை பெய்ததில் நான் படுத்துக் கொள்ளும் அறையின் கூரை அப்படியே அடித்துக்கொண்டு போய்விட்டது, அப்போது நீ அங்கே வந்து —"

"போதும்; மேலே சொல்ல வேண்டியதில்லை, ஆதித் அண்ணா!" என்றதும் ஸரளா பெருமூச்செறிந்தாள். பிறகு, "அந்த நாள் திரும்பி வரப்போகிறதா?" என்று கூறி விட்டு, வேகமாக எழுந்து போக முயன்றாள்.

ஆதித்தியன் வியாகுலமுற்று ஸரளாவின் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு,

அந்த சீரு எங்கே? அவர் வரச் சற்றுத் தாமதமானால், ஆகாரத்தை வைத்துக்கொண்டு காத்திருப்பேன். அப்போது என்னைத் தேனொழுகும் குரலில் 'அன்னபூர்ணா' என்று அழைப்பார்; முறுவல் காட்டித் தாம்பூலம் சமக்கும் இன்னுயிர்ப் பாங்கி' என்றெல்லாம் ஆசையுடன் என்னை ஏற்றுக் கொள்வார். அன்றெல்லாம் குடும்பத்தைப் பற்றிய எந்த அற்ப விஷயமானாலும் என்னுடன் கலந்து ஆலோசித்த பின்பே செய்ய முற்படுவார். எனக்கு 'ஸசிவோத்தமி' என்றும், சில ஸமயம் 'ஹோம் ஸெக்ரடரி' என்றும் பதவிப் பெயர்களைச் சூட்டுவார். கரை புரளும் நிறை புனலுடன் கடலினுள் புகும் பெரிய ஆறு, திடீரெனப் பெருக்கற்றுக் கற்களும் துறுகல்லும் தெரிய வறண்டு நிற்பது போன்ற நிலைக்கு இன்று நானும் வந்து விட்டேன்."

"மன்னி, கவலைப்படாதே. நோய் தீர்ந்து எழுந்து விடுவாய். உனக்குரிய பீடத்திலேயே மீண்டும் நீ வீற்றிருப்பாய்."

"இந்த வீண் ஆசை யெல்லாம் காட்டி ஏமாற்றாதே, ரமேன்! டாக்டர்கள் மறைவாகப் பேசிக் கொள்வதெல்லாம் என் செவிக்கு எட்டாமல் இல்லை. அதற்காகவே இவ்வளவு நான் இன்பத்தில் வளர்ந்து சென்ற இந்த வாழ்வைக் கைவிடாமல் இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கிறேன்! நிராசையினால் ஏற்படும் சபலம்!"

"டாக்டர்கள் பேசிக் கொள்வது உண்மையானால் பெரிதென மதித்துப் பெற்றதை நீ தாராள சிந்தையுடன் துறந்து விடு. இதுவரை காப்பாற்றி வந்த உன் கௌரவத்தை முடிவில் குறைத்துக் கொண்டு செல்வானேன்? நீ பிரியும்போது இந்த வீட்டில் உன் ஞாபகமே என்றென்றும் புதிய மகிமையுடன் இருக்கும்படி செய்து விட்டுப் போ."

"என் இருதயம் இருகூறாகப் பிளந்து விடும் போலிருக்கிறது; ரமேன்! இத்தனை நாள் அனுபவித்த இன்பமனைத்தும் துறந்து சிரித்த முகமாகவே நான் செல்வேன். ஆனால்—என் பிரிவாற்றாமையின் பொருட்டு ஒரு விளக்கு மினுக்மினுக்கென்று எரிவதற்கு எங்கேயாவது ஒரு துளி இடம் இராதா? இதை நினைக்கும்போது எனக்குச் செத்துப் போக மனம் வரவில்லையே; என்ன செய்வேன்? இந்த ஸரளா எனக்குக் கொஞ்சமேனும் இடம் விடாமல் முழுவதையும் பிடித்துக் கொள்வதா? இதுவோ கடவுள் காட்டும் தீர்ப்பு?"

"வாஸ்தவத்தைச் சொல்லுகிறேன், மன்னி! கோபித்துக் கொள்ளாதே. நீ சொன்னதெல்லாம் என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. உன்னால் அனுபவிக்க முடியாததை மனப்பூர்வமான இஷ்டத்துடன், இத்தனை நாள் யாருக்குக் கொடுத்து வந்தாயோ அவருக்கே அர்ப்பணம் செய்து விடேன். நீ கொண்டிருக்கும் அத்தகைய உயர்வான காதலில் ஒரு பெருங் குறையை வைத்து விட்டுச் செல்வானேன்?— பணிந்து கேட்டுக் கொள்கிறேன் மன்னி. வாழ் நாள் முழுவதும் தாராள மனத்துடன் இருந்துவிட்டுக் கடைசிக் காலத்தில் கஞ்சத்தனத்தைக் காட்டி விட்டுச் செல்லாதே!"

தேம்பித் தேம்பி அழுதாள் கிரஜா. மௌனமாக ரமேன் உட்கார்ந்திருந்தான் — ஆறுதல்



சொல்லக்கூட அவன் முற்படவில்லை. அழுகையின் வேகம் தணிந்ததும் நீரஜா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள்.

"நான் ஒன்று பிச்சை கேட்கிறேன், ரமேன்!"

"என்ன அது, சொல்லேன் மன்னி!"

"சொல்கிறேன் கேள். கண்ணீர் விட்டு என் உள்ளம் நெக்குருகும் பொழுது அந்தப் பரமஹம்ஸரின் படத்தையே நோக்குவேன். ஆனால் அவரது அருள்மொழி என் இருதயத்துள் புகவில்லையே! என் மனம் இவ்வளவு விகாரமாகப் போய்விடுமா! இவ்வளவு குறுகியதாகிவிடுமா! நான் ஒரு குருவை அடையும் வழியை எனக்குக் காட்டு. இல்லாமற் போனால் இந்தப் பந்தம் அறாது. மீண்டும் மீண்டும் சப்பாசையிலேயே சிக்கியிருக்க வேண்டியதுதான். சம்ஸாரத்தில் இத்தனை நாள் சுகமாகக் காலம் கழித்து விட்டேன்; இறந்த பின்பு இந்த இடத்திலேயே தீராத் துயருடன் என் ஆவி யுகம் யுகமாக அழுதுகொண்டே சுற்றி அலையுமே!"

"மன்னி, ஒரு விஷயம் சொல்லுகிறேன், கேள்: உன் சொத்தை யாரோ களவாடிக் கொண்டு போவதாக நீ நினைத்துக் கொள்ளும் வரை, இந்த வெந்தழல் உன்னை உள்ளுற எரித்துக் கொண்டுதா னிருக்கும். உனக்கு நிம்மதியே இராது. ஆனால் நிச்சயமாக உட்கார்ந்து ஒரு தரம் சொல்லிக் கொள் பார்க்கலாம்:— 'கொடுத்துவிட்டேன்; விலையில்லாதது எதுவோ அதை, எல்லாரையும் விட யார்மீது எனக்கு ஆசையோ அவருக்கே கொடுத்து விட்டேன்' என்று. உன்னை அழுத்தும் பாரமெல்லாம் ஒரே நிமிஷத்தில் போய்விடாதா? ஆனந்தமே உன் மனத்தை நிரப்பிக் கொள்ளும். எந்தக் குருவும் தேவை இல்லை. இப்போதே சொல்: 'கொடுத்தேன், கொடுத்தேன், துளிக்கூட நான் வைத்துக் கொள்ள வில்லை. இருந்ததை யெல்லாம் கொடுத்து விட்டேன்; நிர்மலமான மனத்துடன் விலகத் தயாராக இருக்கிறேன். சம்ஸாரத்தின் துயரில் மணி முடிச்சு எதுவும் போடாமல் போவேன்' என்று."

"ஆஹா, ரமேன், அப்படிச் சொல்லு. கொடுத்து விடுகிறேன், கொடுத்து விடுகிறேன்!—முழுவதையுமே! இனித் தாமதம் செய்ய மாட்டேன்; இதோ இப்பொழுதே, நீ அவரை அழைத்துக் கொண்டு வா!"

"இன்று வேண்டாம், மன்னி. கொஞ்ச நாள் வரைக்கும் மனத்தைக் கட்டுக்குள் அடக்கி வை."

"இல்லை, இல்லை; என்னால் பொறுக்க முடியாது. இந்த வீட்டை விட்டு, அந்த ஜப்பான் குடிலுள் வசிக்கப் போவதாக அவர் சொன்னது முதல் இந்தப் படுக்கை எனக்குச் சிதையாக அல்லவோ மாறி விட்டது! அவர் திரும்பி வந்து என்னைப் பாராமல் இருந்தால், இன்று இரவுகூட என்னால் தாளமுடியாது. இருதயம் வெடித்து இறந்து போவேன். உடனே ஸரளாவையும் அழைத்து வா. என் மனத்தைப் புண்படுத்தும் அக்கூரிய ஈட்டியைப் பறித்தெறிவேன். பயப்பட வேண்டாம். இதோ சத்தியமாகச் சொல்லுகிறேன்."

"இருக்கட்டும் பார்க்கலாம். இன்றைக்கு வேண்டாம்."

"சமயம் நழுவிப் போய்விடுமோ என்று தான் அஞ்சுகிறேன். இப்பொழுதே கூப்பிட்டுக் கொண்டு வா" என்றாள் நீரஜா. பரமஹம்ஸரின் படத்தையே நோக்கி அஞ்சலி செய்து "ஸ்வாமி! எனக்கு திடத்தைக் கொடு, திடத்தைக் கொடு. பேதையான எனக்கு, நாயினும் கடை கெட்ட எனக்கு முக்தியைக் கொடு. என் துயரமே நான் நம்பியிருந்த கடவுளையும் மறக்கச் செய்தது. என் பூஜை அர்ச்சனை யாவும் எங்கே போயினவோ?—ரமேன்? ஒன்று கேட்கிறேன். தடுத்துக்கூற மாட்டாயே?" என்றாள்.

"என்ன, சொல்லு."

"என்னை ஒருதரம் பூஜை அறைக்குள் போகவிடேன். பத்தே நிமிஷம். எனக்கு அப்போதுதான் பலம் வரும். எனக்கு எந்த விதமான பயமும் இராது."

"சரி, போ—நான் தடுக்க மாட்டேன்."

"ஆயா!"

"என்ன, கொழந்தே?"

"என்னைப் பூஜை அறைக்குள் அழைத்துக் கொண்டு போ."

"இது என்னம்மா? டாக்டர் பாபு—"

"யமனைத் தடுக்க டாக்டர் பாபுவினால் முடியாமல் இருக்கும்போது, என் கடவுளை என்னிடமிருந்து தடுத்துவிட முடியுமா?"

"ஆயா, அவளை மெல்ல அழைத்துக் கொண்டு போ. ஒன்றும் வந்து விடாது. பயமில்லை. அவளுக்கு உடம்பு அதனால் சற்றுக் குணப்பட்டாலும் குணப்படும்' என்றான் ரமேன்.

(தொடரும்)

★ ஓய்! அடுத்த வீட்டு அண்ணாசாமி ஐயரே! எந்த வேளையில் நீர் என்னைப் பார்த்து, "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று கேட்க ஆரம்பித்தீரோ, அது முதல் பிடித்தது எனக்குச் சனியன்!

# பையன் இருந்தால் ~ சொல்லுங்கள்!

"நாடோடி"

● இதனால் நான் என்னுடன் சிநேகம், உறவு, பரிச்சயம், பாத்தியதை முதலியன கொண்டாடும் சகல கனதனவான்களுக்கும், குறிப்பாக இந்த அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யருக்கும், அவர் மூலமாக என்னுடன் பாத்தியதை கொண்டாடுகிறவர்களுக்கும் தெரிவித்துக் கொள்வது யாதெனில் :—

ஐயா, தயவுசெய்து என்னை விட்டு விடுங்கள்! வீணாக என் உயிரை வாங்காதீர்கள். நீங்கள் எக்கேடு கெட்டுப் போங்கள். என்னை மாத்திரம் பயித்தியமாக அடித்து விடாதீர்கள். இப்பொழுதே நான் பாதிப் பயித்தியமாயிருப்பதாக என் மனைவி சொல்லுகிறாள்.

● ஓய்! அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரே! எந்த வேளையில் நீர் என்னைப் பார்த்து, "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று கேட்க ஆரம்பித்தீரோ, அது முதல் பிடித்தது எனக்குச் சனியன்! உலகமே, "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று என்னைக் கேட்க ஆரம்பித்து விட்டது!

முதல் முதல் நீர் என்னைப் பார்த்து அப்படிக் கேட்டபோது, வீட்டில் வேலை செய்யத்தான் பையன் கேட்கிறீர் என்று நினைத்துக்கொண்டு, "ஆஹா! அதற்கென்ன? எங்கள் வீட்டில் வேலை செய்யும் பையனுக்கு உறவுப் பையன் ஒருவன் இருக்கிறான். சம்பளம் ஏழு ரூபாய் கொடுத்தால போதும்" என்று சொன்னேன். ஞாபகம் இருக்கிறதா? இதைக் கேட்டு விட்டு, நீர் சிரித்தீர். "வேலை செய்கிற பையன் இல்லை, ஸ்வாமி! எனக்கு வேண்டியது மாப்பிள்ளைப் பையன்" என்றீர்.



நாளைக்கு மாப்பிள்ளையாக வரப் போகிறவனை இம்மாதிரி பையன் என்று அழைக்கிறார்கள் என்று தெரிந்ததும், எங்கள் வீட்டில் வேலை செய்யும் பையனை, "பையா!" என்று கூப்பிடுவதற்குக்கூட எனக்குப் பயமாகப் போய்விட்டது. எங்கே நீங்கள் நான் "பையனை"க் கண்டுபிடித்துவிட்டதாக நினைத்துக் கொண்டு இங்கே ஓடி வந்து விடப் போகிறீர்களோ என்று எனக்கு நடுக்கம்!

● ஓய்! கிருஷ்ணஸ்வாமி அய்யர்வாள்! நான் கறிகாய்க் கடைக்குப்போக வேண்டுமானாலும், மளிகைக் கடைக்குப் போக வேண்டுமானாலும், தங்கை வீட்டுக்குப் போக வேண்டுமானாலும், தமக்கை வீட்டுக்குப் போக வேண்டுமானாலும், காப்பி ஹோட்டலுக்குப் போக வேண்டுமானாலும், சினிமாவுக்குப் போக வேண்டுமானாலும், ஆபீசுக்குப் போக வேண்டுமானாலும், ஆபீசிலிருந்து திரும்ப வேண்டுமானாலும் தங்கள் வீட்டு வழியாகத்தான போக வேண்டியிருக்கிறது. அதற்காக என் தலையைக் கண்ட போதெல்லாம், "பையன் இருந்தால் சொல்லுங்கள்!" "பையன் இருந்தால் சொல்லுங்கள்!" என்று என்னைப் பிடித்து வாட்டுகிறீர்களே, நியாயமா? நான் பையன் யாரையோ சட்டைப் பைக்குள்ளோ அல்லது வேஷ்டித் தலைப்புக்குள்ளோ ஒளித்து வைத்திருப்பது போலல்லவோ என்னைப் பிடித்துக் குலுக்கு, குலுக்கு என்று குலுக்குகிறீர்?

● ஐயா, ராம சாஸ்திரிகளே! தங்கள் பெண் இன்டர்மீடியட்

பாஸ் பண்ணியிருக்கிறான் என்றும், அவனுக்கு ஆர்மோனியம் நன்கு வாசிக்கத் தெரியும் என்றும், அவன் பாடினால் இன்றைக் கெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம் என்றும், அவன் சமையலை இன்றைக்கெல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருக்கலாம் என்றும் இதுவரை என்னிடம் ஒரு ஆயிரம் தடவையாவது சொல்லியிருப்பீர். தங்கள் பெண் சங்கீதத்தைக் கேட்டு விட்டுப் போகும்படி நூறு தடவைக்குக் குறையாமல் வற்புறுத்தியிருப்பீர். இருந்தும் எதற்காக என்னைப் பிடித்துத் திரும்பவும், திரும்பவும் அவளுடைய பெண் சங்கீதத்தைக் கேட்கும்படி ஹிம்ஸிக்கிறீர்? நீர் என்னை எவ்வளவு ஹிம்ஸித்தாலும், யாராவது பையன் இருந்தால் தானே சொல்லுவதற்கு?

● ஐயா, நாராயணய்யரே! தங்கள் பெண் ஜாதகத்தில் என்னென்ன கிரகங்கள் எந்தெந்த இடத்தில், யார் யாரைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன என்னும் விஷயம், தாங்கள் சொல்லிச் சொல்லி எனக்கு அப்படியே நெட்டுரு ஆகி விட்டது. பார்ப்பதற்கு ஒரு மாதிரி 'மாதிரமாக' இருந்தாலும் பெண் பலே அதிர்ஷ்டக்காரி, குருவும், சனியும் கைகோர்த்துக் கொண்டு புதனைப் பார்க்கப் போவதால் இவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவனை அதிர்ஷ்டம் பளார் பளார் என்று கன்னத்தில் அறைக்கும் என்றெல்லாம் எனக்குத் தெரியும். இருந்தும் "பையன் இருந்தால் சொல்லுங்கள்" "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று ஆரம்பித்துக் கொண்டு, பெண் ஜாதகத்தில் கிரகங்கள் யார் யாரைப் பார்க்கின்றன என்று சொல்லி என்னைப் பயித்தியம் அடிக்கிறீர்களே, நியாயமா?

● ஸார், மிஸ்டர் ஏ. ஆர். அய்யர் அவர்களே! "பயலுக்கு ஒரு தம்படி வரதட்சிணை கொடுக்க முடியாது. தாலியைக் கையில் கொடுப்பேன், அதைப் பெண் கழுத்தில் கட்டிவிட்டு அவன் போய்விட வேண்டியது (பெண்ணையும் அழைத்துக் கொண்டுதான்.) அப்படிப் பட்ட பயல் எவனாவது இருந்தால் சொல்லும்" என்று தினம் தாங்கள் என் கழுத்தை அறுக்கிறீர்களே! அப்படிப் பட்ட பயல் இருந்தால் அவன் கழுத்தைப் பிடித்து உங்கள் காலடியில் கொண்டுவந்து தள்ள மாட்டேனா! எதற்காக என்னைக் கண்ட போதெல்லாம் இந்தக் கேள்வியைக் கேட்டு என் மூளை குழம்பச் செய்கிறீர்?

● ஐயா, கனதனவான்களே! நீங்களும், இன்னும் உங்களைப் போன்றவர்களும் தயவு செய்து என்னைப் "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று வதைக்காதீர்கள். இதனால் எனக்குப் பாதிப் பயித்தியமே பிடித்து விட்டது போலாகி விட்டது. வாசலில் தயிர்க்காரன் 'கூ' என்று கூவினால் "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று கெஞ்சுவது போலிருக்கிறது. பால்காரன், "அம்மா!" என்று கூப்பிட்டால், "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று பதறுவது போலிருக்கிறது. தபால்காரன், "ஸார், போஸ்ட்" என்று கூப்பிடும்போது கூட யாரோ "பையன் இருந்தால் சொல்லுங்கள்" என்று பெருமூச்செறிவது போலிருக்கிறது.

உங்கள் மேல் எல்லாம் எனக்கு இரக்கம் இல்லாமல் இல்லை. உங்களையெல்லாம் பார்க்கும்போது திருதராஷ்டிரனைப்போல் நமக்கு நூறு பிள்ளைகள் இருக்கக் கூடாதா, இருந்தால் ஆளுக்கொரு பையன் கொடுத்து உதவலாமே என்று கூடத் தோன்றுகிறது.

ஆகவே, தயவுசெய்து என் மீது இரக்கம் வைத்து என் உயிரை வாங்காதீர்கள். தொந்திரவு செய்தீர்களோ, அப்புறம் நிஜமாகவே பையன் இருந்தாலும் சொல்ல மாட்டேன்!

★ "என்ன ஆயிற்று! என்ன ஆயிற்று!" என்று வெளியில் வரும் ஒவ்வொருவரையும் அவன் கண்கள் கேட்டன. வினாடிகள், நிமிஷங்கள்! அவை நிமிஷங்களா அல்லது வருஷங்கள்தானா? — கடைசியில் ..........

# என்ன ஆகுமோ?

"வஸந்தன்"

● "ஏ வளையல்!" "ஏ வளையல்!" என்று அந்தச் சின்னஞ் சிறு குரல் கூப்பிட்டது. தூரத்தில் சென்ற வளையற்காரனின் காதில் அது விழவில்லை. குழந்தை வேகமாக ஓடினாள். அந்த வளையற்காரன் கையைப் பிடித்துக் கோபமாகக் குலுக்கி, "ஏய்! உன்னைத் தானே! நான் கூப்பிட்டுக் கொண்டே இருக்கிறேன், நீ மாட்டில் போய்க் கொண்டிருக்கிறாயே?" என்று அதட்டினாள்.

வளையற்கார இளையபெருமாளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "தெரியாத்தனந்தான் அம்மா! கன்னத்தில் போட்டுக் கொள்கிறேன். மன்னிக்க வேண்டும்" என்றான்.

"அப்படியானால் வா, எங்கள் வீட்டுக்கு!" என்று சொல்லிக் குழந்தை கமலா வளையற்காரனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனாள்.

அப்படிப் போகும்போதுதான் இளைய பெருமாள் முதன் முதலாகக் கமலாவைப் பார்த்தது. அந்தக் குழந்தையின் நடையிலேயே அவன் கோபத்தையும் மிடுக்கையும் தெரிந்துகொண்டு விட்டான். அப்பப்பா! கூப்பிட்டவுடன் வரவில்லையாம்! இத்தனை சின்னக் குரலை வைத்துக் கொண்டு என்ன காய்தா பண்ணுகிறது!

கமலா உள்ளே போய் அம்மாவை அழைத்து வந்தாள். "எடு! எடு! வளையலை! ஏன் விழிக்கிறாய்?" என்றாள் கமலா. பேரம் மிகவும் கடினமாக இருக்கும்போலிருக்கிறதே, என்று எண்ணிக்கொண்டே இளையபெருமாள் மூட்டையை அவிழ்த்தான். மூட்டையை அவிழ்த்ததுந்தான் அவனுக்கு உண்மையிலேயே பயம் உண்டாயிற்று.

"அம்மா! குழந்தை கைக்குச் சரியாக என்னிடம் வளையல் இல்லை. எல்லாம் விற்றுப் போய்விட்டது!" என்றான்.

கமலாவுக்குக் குபீரென்று அழுகை பொத்துக் கொண்டு வந்துவிட்டது. "அழாதே, கமலு! நாளைக்கு வளையல் கொண்டுவரச் சொல்கிறேன்" என்று எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவள் கேட்கவில்லை.

"நாளைக்கு அவசியம் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு இளைய பெருமாள் வெளியே வந்தான்.

அவன் வீடு பத்து மைலுக்கு அப்பால் இருந்தது. எவ்வளவு தூரமாக இருந்தால் என்ன? உடனே போய்க் குழந்தைக்கு வளையலை எடுத்துக்கொண்டு வருவதைத் தவிர வேறு காரியம் இருப்பதாகத் தோன்றவில்லை.

● இளையபெருமாள் வேகமாக நடந்தான். அவன் பெயர் இளையபெருமாள் என்றிருந்தாலும் அவன் இப்பொழுது மூத்த பெருமாளாக ஆகியிருந்தான். எனினும் அவன் உடம்பில் உற்சாகமும் பலமும் தோன்றின. வீட்டுக்குப் போனதும் பெட்டியைத் திறந்து பார்த்தான். கொஞ்ச நாளைக்குமுன்பு மாதிரிக்காகச் செய்து வைத்திருந்த புது மோஸ்தர் வளையல் அவன் கண்ணில் பட்டது. ஆமாம், இதை அந்தக் குழந்தையின் கையிலல்லவா போட்டு அழகு பார்க்க வேண்டும்? வளையுடன் கமலாவின் வீட்டுக்குத் திரும்பினான்.

"அம்மா! அம்மா! பார்த்தாயா! எவ்வளவு அழகாயிருக்கிறது?" என்று கமலா தன் கையிலுள்ள வளையலைப் பார்த்துவிட்டுக் குதியாய்க் குதித்தாள். அந்தக் குழந்தையின் தேஜஸ் சொட்டும் முகத்தைப் பார்த்ததும் இளையபெருமாள் முகத்திலும் புன்னகை தாண்டவமாடிற்று. சோகம் நிறைந்த அவன் வாழ்க்கையில் அதுவே இன்ப நேரமாக அமைந்தது.

● அதற்குப்பிறகு கமலாவை அவனால் எப்படி மறக்க முடியும்? எப்பொழுது

அந்தப் பக்கம் வந்தாலும் கமலாவைப பார்த்துவிட்டுப் போவான். விதம் விதமான வளையல்களை அவளுக்கென்றே வாங்கிக் கொண்டு வருவான்.

“பெருமான்! பெருமான்! ஏன் இத்தனை நாளாய் இந்தப் பக்கம் வருவதில்லை?” என்று கேட்பாள் கமலா.

“நான் வந்து இருபது நாள்தானே ஆகிற்று. நான் வயிறு வளர்க்க வேண்டாமா? ஊர் ஊராய்ப் போனால்தானே இரண்டு காசு வரும்” என்பான். “வேண்டாம். நான் காசு கொடுக்கிறேன். இங்கேயே எங்கள் வீட்டில் இருந்து விடு!” என்பாள் கமலா.

பிறகு தாயாரைப் பார்த்து, “அம்மா! நம்ம தாத்தா மாதிரி வீட்டிலே இல்லாமல் எதற்காகப் பெருமான் இப்படி அலைகிறான்?” என்று கமலா சந்தேகம் கேட்பாள். “வளையற்காரனே, இல்லையோ?” என்று அம்மா சந்தேகத்தைத் தீர்த்து வைப்பாள்.

பெருமான் கமலாவைப் பற்றி யோசித்துப் பார்ப்பது உண்டு. எவ்வளவோ குழந்தைகளுக்கு, எத்தனையோ வருஷ காலமாக அவன் வளையல் போடவில்லையா? ஆனால், அந்தக் குழந்தையிடம் மட்டும் அவனுக்குப் பாசமும் ஆசையும் ஏற்படுவானேன்? அவளது சிறு கைகளைத் தொட்டு வளையல் போடும்போது உடம்பெல்லாம் ஓர் அதிசய ஆனந்த உணர்ச்சி ஏற்படுவானேன்? நேசமான இரு இருதயங்கள் சந்திக்கும்போது இப்படித்தான் ஏற்படுமா?

● கமலா அதிரூபவதியாக வளர்ந்து கொண்டிருந்தாள். குழந்தையின் வெகுளிப் பேச்சும் விஷமத்தனமும் போய் யௌவனத்தின் எழிலும் அடக்கமும் வந்து கொண்டிருந்தது. ஆனால் ஒன்று மட்டும் மாறாமல் இருந்தது. அதுதான் அவளுக்குப் பெருமாளிடம் தோன்றியிருந்த நேசம்.

ஒவ்வொரு மாதத்தின் ஆரம்பத்திலும் பெருமான் அந்தக் கிராமத்துக்கு வருவது வழக்கம். கமலா வாசலில் நின்று கொண்டு தளர்ந்து மெலிந்த அந்த உருவம் வருகிறதா என்று பார்ப்பாள். யாராவது அவன் மாதிரி பிச்சைக்காரர்கள் வாசலில் போனால் கூட, அவள் தனது தங்கக் கையினாலே அரிசி கொண்டு வந்து போடுவாள். பெருமான், தேக அசௌக்யமுற்றிருந்தாலுங் கூட மாதத்துக்கு ஒரு தடவையாவது வளை



யல் பையைத் தூக்கிக்கொண்டு கமலாவைப் பார்க்க வராமலிருக்க மாட்டான்.

● ஒரு நாள் கமலாவின் வீட்டில் ‘டம்’ ‘டம்’ மென்று மேளச் சத்தம் கேட்டது. ஏனென்றால் அன்று அவளுக்குக் கல்யாணம். கமலா தன் அகன்ற பெரிய கடைக் கண்களால் புருஷனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கல்யாணப் பந்தலில் ஒரு மூலையில் பெருமான் நின்று கொண்டு தம்பதிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். “ஆஹா! கமலாவுக்கு ஏற்ற புருஷன்தான். என்ன தேகக் கட்டு! முகத்தில் என்ன வசீகரம்!” என்று அவன் பரவசம் அடைந்தான். கமலா சட்டென்று கையில் அடுக்கியிருந்த வளையல்களில் வானவில்லின் வர்ண விசித்திரங்களைப் பார்த்துவிட்டுத் தலைநிமிர்ந்தாள். அவள் கண்கள் ஒரு வினாடி சுற்றி அலைந்தன. மூலையில் நின்ற பெருமானைப் பார்த்ததும் அவள் முகத்தில் மந்தஹாஸம் தோன்றிற்று.

கல்யாணமான மறுதினமே மாப்பிள்ளை வீட்டார் பெண்ணையும் கூடவே அழைத்துப்போக விரும்பியதால் கமலா புறப்பட்டாள். வாசலில் இரட்டை மாட்டு வண்டி வந்து நின்றது. கமலா வண்டியில் ஏறிக் கொள்ளும் போது தூரத்தில் நின்று கொண்டிருந்த பெருமானைப் பார்த்தாள். அவள் உதடுகள் துடித்தன. வாய் பேச முடியாமல் ஒரு வினாடி அப்படியே நின்றுவிட்டாள். பெருமான் அவள் வண்டியில் ஏறிக் கொண்டதைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. மங்கிய அவனது பார்வையைக் கண்ணீர் இன்னும் மங்கலாக்கிற்று.

'குழந்தையை இனி எப்பொழுது பார்க்கப் போகிறேன்" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான் பெருமாள். வண்டி மறைந்து விட்டது. "குழந்தை அடிக்கடி இங்கே வருவாள்! பேஷாகப் பார்க்கலாம்" என்றுன் கமலாவின் தாயார் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு.

● இரண்டு வருஷம் கடந்து சென்றது. ஒடிற்று என்று எப்படிச் சொல்ல முடியும்? முதுமைப் பருவத்தில் வளர்ந்து செல்லும் ஒவ்வொரு நாளும் கமலாவின் நினைவால் பெருமாளுக்கு ஒரு யுகமாக வளர்ந்து சென்றது. "குழந்தை எப்பொழுது வரும்? எப்பொழுது வரும்?" என்று கேட்டுப் பெருமாளுக்கும் அலுத்துச் சலித்து விட்டது.

ஒரு நாள் அவன் கனவு பலித்து விட்டது. எதிர்பாராதது நடந்தே விட்டது. கமலா நிஜமாகவே ஊருக்கு வந்தாள். பெருமாள் அச் செய்தியைக் கேட்டு ஓடோடியும் வந்தான். ஆஹா! கமலாவா அது? அடையாளமே தெரியவில்லையே! சோபையான அவள் முகத்திலும் ஏதோ மாறுதல் இருந்தது. மெல்லிய அவள் தேகத்திற்கு வெளிர் நிறம் கொடுத்திருந்தது. பெருமாள் உடனே கண்டுகொண்டு விட்டான்.

"பெருமாள்! பெருமாள்! ரொம்ப இளைத்துப் போய்விட்டாயே" என்று கேட்டுக் கொண்டே கமலா வந்தாள். "வளை காப்புப் போடுவார்களே அம்மா, அது எப்பொழுது?" என்று பெருமாள் கேட்டான்.

கமலாவுக்கு வெட்கமாய்ப் போய் விட்டது. தலையைக் கவிழ்ந்துகொண்டு,

"ரொம்ப அவசரமோ அதற்கு?" என்றுள்.

"ஆமாம்; அவசரந்தான்! என் கையால் உனக்கு வளை போட வேண்டும் என்று எத்தனை நாளாகக் காத்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா?" என்று கேட்டான் பெருமாள்.

● வீட்டுக் கூடத்தில் ஏகக்களே பரமாயிருந்தது. வாசலில் கிராமத்து நாயனக்காரர் சகிக்க முடியாதபடி ஒரு ராகத்தை எடுத்து விளாசிக் கொண்டிருந்தார். உள்ளே, பெருமாள் அற்புதமாகச் செய்து வைத்திருந்த வளையல்

தனைக் கமலாவின் கையில் அடுக்கிக் கொண்டிருந்தான். மூதுமையாலும் உணர்ச்சியாலும் அவன் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

பெருமாள் சாப்பிட்டு விட்டு அன்று அங்கேயே தங்கி விட்டான்.

"கமலுவுக்கு உடம்பு ரொம்ப பல ஹீனமாக இருக்கே! குழந்தை பெற்று எப்படிப் பிழைக்கப் போகிறாள்?" என்று ஒரு அம்மாள் சொல்லிக் கொண்டிருந்தாள். "ஐயோ! எங்க அகத்து மங்களம் இப்படித்தான் இருந்தாள்! கடைசியிலே ...... உம்! இவளாவது சௌக்யமாக இருக்கணுமே?" என்று இன்னொரு அம்மாள் முக்கினாள்.

பெருமாளுக்கு இதையெல்லாம் கேட்டதும் வயிறு பகீரென்றது. அவர்கள் தலையில் இடி விழாதா என்று நினைத்தான்.

ஆனால் உண்மையில், அவர்கள் கேட்ட அதே கேள்விதான் வளையற்காரக் கிழவன் மனத்திலும் தோன்றியிருந்தது. ஏனென்றால் கமலா அவ்வளவு பலஹீனமான நிலைமையில் இருந்தாள். "என்ன ஆகுமோ?" என்ற பயம் அவனை வாட்டிக் கொண்டிருந்தது. ஆனால் அதையெல்லாம் இவர்கள் குழந்தை காதில் விழும்படி பேசி அவனைப் பயப்படும்படி செய்யலாமா?

● ஒரு நாள் அவன் வந்தபோது கமலாவின் வீட்டுத் திண்ணையில் பலர் உட்கார்ந்திருந்தனர். டாக்டர் உள்ளே போனார். விஷயத்தை ஊகித்துக் கொண்ட பெருமாள், "பகவானே! என்னை மோசம் செய்துவிடாதே!" என்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான்.

அவன் வாசலை விட்டு நகரவில்லை. உள்ளே ஒரே பரபரப்பாயிருந்தது. வீட்டில் ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை. பெருமாள் உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும் உள்ளேயிருந்து என்ன செய்தி வரப்போகிறதென்று தான் காத்துக் கொண்டிருந்தது.

"என்ன ஆயிற்று! என்ன ஆயிற்று!" என்று வெளியில் வரும் ஒவ்வொருவரையும் அவன் கண்கள் கேட்டன. விநாடிகள், நிமிஷங்கள்! அவை நிமிஷங்களா அல்லது வருஷங்கள்தானா? — கடைசியில் அந்தச் செய்தி வந்தது.

"பெண் குழந்தை! தாயும் குழந்தையும் சௌக்கியம்!" என்று கமலாவின் தாயார் ஓடி வந்து சொன்னாள். அப்பொழுது சந்தோஷம் அவன் தொண்டையை அடைத்தது.

"ஸ்வாமி, ஆண்டவனே!" என்று பெருமாள் மேலே கையை உயர்த்திக் கும்பிட்டான்.

மெதுவாக, அவனது நடுங்கிய கைகள் பையை அவிழ்த்து அழகிய சின்னஞ்சிறு இரண்டு ஜோடி வளையல்களை எடுத்து வெளியில் வைத்தன!

● அன்று மாலையில், கமலா கண்ணைத் திறந்து பார்த்தாள். "அம்மா! பெருமாள் வாசலில் இருக்கிறானா? அவனிடம் குழந்தையைக் கொண்டுபோய்க் காண்பியேன்!" என்றாள் அவள்.

கமலாவின் தாயார் குழந்தையைக் கொண்டு வந்ததும், அதையே பார்த்துக் கொண்டு பெருமாள் கற்சிலை போல் நின்றான். "அப்படியே குழந்தையை உரித்து வைத்திருக்கிறதே!" என்று சொன்னவன், சட்டென்று தன் நிலையை மறந்து உணர்ச்சி தாங்க மாட்டாமல் குழந்தையை வெடுக்கென்று பிடுங்கி மார்போடு அணைத்துக் கொண்டான்!



வந்தவர் (வெளியில் இருந்தபடியே) :— நாய் கடித்து விடுமோ?

வீட்டுக்காரர் :— நேற்றுத்தான் இந்த நாயைப் புதிதாக வாங்கினேன், பரவாயில்லை, வாருங்கள்! என்னதான் செய்கிறது, பார்ப்போமே!

## சாதுரியக் கதை

### வாயுள்ள பிள்ளை

● முன்னொரு காலத்தில் கர்நாடகப் பிரதேசத்தில் ஒரு அரசர் இருந்தார். ரோஜாப் புஷ்பங்கள் என்றால் அவருக்கு உயிர். அதனால் தம் அரண்மனைக்குப் பக்கத்தில் அழகான நந்தவனம் ஒன்று அமைத்து, அதில் ரோஜாப் புஷ்பச் செடிகள் பயிரிடச் செய்தார்.

நந்தவனத்தில் அழகழகான ரோஜாப் புஷ்பங்கள் புஷ்பித்தன. ஆனால் அரசருக்கு ஒரு புஷ்பமாவது கிட்டவேண்டுமே, கிடையாது. யாரோ, தினம் இரவு வந்து புஷ்பங்களைத் திருடிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் அரசருக்குக் கோபம் தாங்க முடியவில்லை. நந்தவனத்துக் காவல்காரர்களை மிகவும் கோபித்துக் கொண்டார். அடுத்த நாள் காலைக்குள் திருடனைப் பிடித்துத் தம் எதிரில் நிறுத்தாவிடில், அவர்களைச் சிறையிலிடுவதாகப் பயமுறுத்தினார்.

● காவல்காரர்கள் அன்று இரவு முழுவதும் கண் கொட்டாமல் காவல் காத்தனர். பல நாள் திருடன் அன்று கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டு விட்டான். திருடன் வேறு யாருமில்லை, மந்திரி குமாரன்தான். அவன்தான் தினம் இரவு வந்து புஷ்பங்களைத் திருடிக்கொண்டு போய்க் கொண்டிருந்தான்.

காவல்காரர்கள் மந்திரி குமாரனையும், அவன் திருடின புஷ்பங்களையும் பல்லக்கில் ஏற்றி ராஜ சபைக்கு எடுத்துச் சென்றனர்.

வழியில் மந்திரி தம் சிநேகிதர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். பல்லக்கை நிறுத்தி விஷயம் என்னவென்று விசாரித்தார். காவலாளிகள் நடந்ததைக் கூறினர். அப்பொழுது மந்திரியின் சிநேகிதர்கள் மந்திரியைப்



பார்த்து, "இந்த அவமானத்தினின்றும் தங்கள் பிள்ளையைக் காப்பாற்றுவதற்குத் தாங்கள் ஏதாவது செய்யக்கூடாதா?" என்று கேட்டார்கள். அதற்கு மந்திரி தன் பிள்ளை காதில் விழும்படியாக, "நான் என்ன பண்ணலாம்? வாயுள்ள பிள்ளை பிழைக்கும். அவ்வளவுதான் எனக்குத் தெரிந்தது?" என்று கூறினார்.

● காவல்காரர்கள் பல்லக்கைக் கொண்டு போய் அரசன் முன் வைத்தார்கள். "இதோ, கையும் களவுமாகத் திருடனைக் கண்டு பிடித்து விட்டோம்" என்றார்கள்.

மந்திரி குமாரன் தான் தோட்டத்தைப் பார்க்க வந்ததாகவும், புஷ்பங்களைத் திருடவில்லையென்றும் சாதித்தான்.

"இல்லை, இவர் திருட்டுத்தனமாகப் பறித்த புஷ்பங்கள் இதோ பல்லக்கில் இருக்கின்றன" என்று கூறினர் காவலாளிகள். ஆனால் பல்லக்கில் ஒரு புஷ்பத்தையும் காணவில்லை. "வாயுள்ள பிள்ளை" யான மந்திரி குமாரன் வழியிலேயே புஷ்பங்களைத் தின்றுவிட்டான்! புஷ்பங்களைக் காணாததால் அரசர் மந்திரி குமாரனை விடுதலை செய்து விட்டார்.

## ஒரு நிமிஷக் கதை

### ரகசியத்தைச் சொல்லுங்கள்

புரொபஸர் சர்மா வகுப்புக்குள் நுழைந்ததுமே மாணவர்கள் கககக என்று பேச ஆரம்பித்தனர்.

சகவர சர்மா உள்ளே வந்ததும் மாணவர்கள் கப்சிப் என்று இருந்தனர். சர்மா அவர்களைப் பார்த்து, "மாணவர்களே, இப்பொழுது நான் ஒரு கட்டுரை வாசிக்கப் போகிறேன். அதைக் கவனமாகக் கேட்டு அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்ல வேண்டும்" என்று கூறித் தம் சட்டைப் பையிலிருந்து ஒரு கை யெழுத்துப் பிரதியை எடுத்து வாசிக்க ஆரம்பித்தார்.

அவர் படிக்க ஆரம்பித்ததிலிருந்து முடிகிற வரையில் மாணவர்கள் சிரிப்பை அடக்க முடியாமல் தவித்தனர்.

கட்டுரையைப் படித்து முடித்ததும் சர்மா மாணவர்களைப் பார்த்து, "இது எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"மகா மோசம், ஹோப்லெஸ்" என்ற வார்த்தைகள் கிளம்பின.

ஒரு மாணவன் எழுந்து, "ஒரே இலக்கணப் பிழை. கருத்தும் புரியவில்லை. பல இடங்களில் முன்னுக்குப் பின் முரணாயிருக்கிறது" என்றான். இன்னொரு மாணவன் எழுந்திருந்து, "இதை எந்தப் பிரகஸ்பதி எழுதினார்?" என்று கேட்டான்.

"இதை எழுதியவர் ஒரு கலாசாலை ஆசிரியர்" என்று பதில் வந்தது.

மாணவர்கள் அத்தனை பேருடைய முகங்களிலும் ஆச்சரியக் குறி தோன்றியது.

"இந்தக் கட்டுரை எழுதிய ஆசிரியரின் பெயரென்ன ஸார்?" என்று ஒரு குரல் கேட்டது.

"நான்தான் எழுதினேன்" என்று ஆசிரியர் சொன்னபோது மாணவர்கள் முகத்தில் ஈயாடவில்லை. மாணவர்கள் ஒருவரை யொருவர் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டனர். அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

சர்மா கம்பீரமான தொனியில் "மாணவர்களே! நான் இதை இரண்டு மூன்று நாள் இரவு கண் விழித்து மண்டையை உடைத்துக் கொண்டு எழுதினேன். நீங்களெல்லாம் இந்த மாதிரிக் கட்டுரைகளை எப்படி அனாயாசமாக ஐந்தே நிமிஷத்தில் எழுதி முடித்து விடுகிறீர்கள்? அந்த ரகசியத்தைச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்.

"ஸோமாஸ்"

# குற்றால வாசம்

"பூரி"

ராமநாதன் ஒரு விஷயத்தைப் பற்றிப் பிறரிடம் பேச இடம், சந்தர்ப்பம் முதலிய எதுவும் பார்த்துக் கொண்டிருப்பதில்லை. அன்று அவன் ஒரு முச்சந்தியில் போய்க் கொண்டிருந்தபோது அவனுடைய சிநேகிதன் சிதம்பரத்தைக் கண்டு விட்டான். உடனே அவனைக் கைதட்டிக் கூப்பிட்டு, "உன் வீட்டுக்குத்தான் கிளம்பினேன். நல்லவேளை, இங்கேயே பார்த்துவிட்டேன்" என்றான்.

"என்ன விசேஷம்? வீட்டுக்கு வாயேன், சாவகாசமாகப் பேசிக்கொள்ளலாம்" என்றான் சிதம்பரம்.

"ஒன்றுமில்லை. ஒரு சின்ன விஷயம். இந்த வருஷக் கோடைக்கு இரண்டு வாரம் எந்த ஊருக்காவது போய்த் தங்கிவிட்டு வரலாமென்றிருக்கிறேன். போன வருஷம் நீ திருக்குற்றாலம் போயிருந்துவிட்டு வந்தாயே, அந்த ஊர் எப்படி?" என்று ராமநாதன் விசாரித்தான்.

"திருக்குற்றாலமென்று ஒரு தரம் சொன்னாலும் எனக்குக் கோபம் வரும்" என்றான் சிதம்பரம்.

"கோடைக்கு ரொம்ப நல்ல ஊர் என்று சொல்கிறார்களே. நானும் அந்த ஊரைப் பற்றிப் படித்திருக்கிறேன். நீ அதனுடைய எல்லா அருமைகளும், எல்லாப் பெருமைகளும் தெரியாமல் பேசுகிறாயே."

"அட, நான் அந்த ஊருக்குப் போயிருக்கிறேன். எனக்குத் தெரியாமல் நீ அங்கே என்ன அருமைகளைக் கண்டு விட்டாய்?"

ராமநாதன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, "சிதம்பரம்! நான் எவ்வளவோ கேள்விப் பட்டிருக்கிறேன். சொல்கிறேன் கேள். அந்தத் திருக்குற்றாலத்திலே, 'வானரங்கள் கனி கொடுத்து மந்தியொடு கொஞ்சும்' என்றான்.

சிதம்பரம், ஆச்சரியத்துடன் "அப்புறம்?" என்றான்.

"மந்திசிந்து கனிகளுக்கு வான் கவிகள் கெஞ்சும்" என்று ராமநாதன் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு உற்சாகமாகப் பாட ஆரம்பித்து விட்டான்.

"அதற்கப்புறம்?"

"அங்கே 'தேனருவித் திரையெழும்பி வானின் வழி யொழுகும்'."

"பேஷ்!"

"அந்த 'முழங்குதிரைப் புனலருவி கழங்கென முத்தாடும், முற்றமெங்கும் பரந்து பெண்கள்.........' என்று சொல்லிக் கொண்டே போனபோது 'பூம்! பூம்' என்று பின்னால் மோட்டார் வண்டியின் சப்தம் கேட்கவே ராமநாதன் அப்படியே ஒரு பாய்ச்சல் பாய்ந்து அப்புறம் ஓடினான். சிதம்பரமும் அவனைப் பின் தொடர்ந்தான்.

"இதற்குத்தான் வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொள்ளலாமென்று சொன்னேன். குற்றாலம் இருக்கிறதே, மகா மோசம்" என்றான் சிதம்பரம்.

"மோசமா? ஏன் அப்படிச் சொல்கிறாய்?"



"ஏன்! அந்த ஊரிலே அதிக ஜன நடமாட்டம் கிடையாது. நாலு பேரைப் பார்த்தோமென்பதில்லை. அஸ்தமித்தால் ஒரே இருட்டு. எலக்டிரிக் லைட் கிடையாது. ஒரு சினிமா கிடையாது. நல்ல சாப்பாட்டுக் கிளப்போ, காபி கிளப்போ கிடையாது. கினைத்தோமென்றால் ஊரை விட்டுக் கிளம்புகிறதற்கு ஒரு ரயிலோ, பஸ்ஸோ, டாக்ஸியோ ஒன்றும் கிடையாது. மாட்டு வண்டியிலேதான் போகணும்......"

"அப்படியா!"

"இன்னும் எவ்வளவோ கஷ்டங்களிருக்கின்றன."

"நான் அந்த ஊருக்குப் போகலாமென்றிருந்தேன். நல்லவேளை, உன்னை இன்று பார்த்தேனே. பங்களூர் போகலாமென்று கோமளம் சொல்கிறாள்" என்றான் ராமநாதன்.

"நல்ல புத்திசாலிப் பெண்" என்று சிதம்பரம் ராமநாதன் மனைவியைப் புகழ்ந்து விட்டு "பங்களூருக்கே போ!" என்றான்.

"ஆமாம்! நீ எந்த ஊருக்குப் போகப் போகிறாய்?" என்று ராமநாதன் விசாரித்தான்.

"எந்த ஊர் என்று தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். திருக்குற்றாலம் போகப் போகிறதே இல்லை" என்று சொல்லி விட்டு சிதம்பரம் வீடு திரும்பினான். அங்கே அவன் மனைவி மீனாட்சி "என்ன, குற்றாலம் போக ஏற்பாடெல்லாம் பண்ணியாய் விட்டதா?" என்றாள்.

"இந்தா மீனா! குற்றாலத்தைத் தவிர வேறு எதைப் பற்றியாவது பேசு. நான் இந்தத் தடவை அந்தக் குற்றாலம் இருக்கும் திக்குப பக்கங் கூட திரும்பிப் பார்க்கப் போவதில்லை" என்று மிகக் கோபமாய்ச் சொன்னான்.

● இந்தச் சம்பாஷணை நடந்து ஒரு வாரமிருக்கும், ஒரு நாள் காலை திருக்குற்றாலம் அருவி ஸ்நான கட்டத்தில் ஒரே கூட்டமாயிருந்தது. "அப்பாடா! பிரம்மானந்தமா யிருககிறது" என்று சொல்லிக் கொண்டே சிதம்பரம் சம்சார சகிதம் ஸ்நானம் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது அவன் முதுகில் யாரோ தட்டியது போலிருந்தது. ஈர உடம்பில் அடிபட்டதனால் அவனுக்குச் சுரீரென்றது. தன்னைத் தட்டிய அந்த ஆசாமியை ஒரே அறையாக அறைந்துவிட வேண்டுமென்று கையை ஓங்கிக்கொண்டு திரும்பினான். ஆசாமி வேறு யாருமில்லை. ராமநாதன்தான். அவன் பக்கத்தில் கோமளம் நின்று கொண்டிருந்தாள்.

"அட நீயும் இங்கேதானா? வந்தாய்! எப்போ வந்தாய்? இங்கே வருகிறதாக ஒரு வார்த்தை சொல்லவில்லையே" என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டு தலையில் விழுந்த ஜலத்தை விழுங்கிக் கொண்டே கேட்டான்.

"இங்கே பேச்சில் கவனமா யிருந்தால் கீழே விழவேண்டியதுதான். அப்புறம் பேசிக் கொள்ளலாம்" என்றான் சிதம்பரம். அப்பொழுது கோமளமும் மீனாட்சியும் ஒருவரையொருவர் பார்த்துப புன்னகை புரிந்து கொண்டனர். வழக்கத்துக்கு விரோதமாக அவர்கள் அப்பொழுது அதிகமாகப் பேசிக் கொள்ளவில்லை. ஸ்நானமான பிறகு இரண்டு நண்பர்களும் பக்கத்தி லிருந்த மண்டபத்துக்கு வந்தனர். ஸ்திரீகள் தங்களுக்கென்று உடைதரிக்க ஏற்பட்டிருநத இடத்துக்குப் போனார்கள்.

"சிதமபரம், இந்த ஊரை அவ்வளவு பழித்தாயே! கடைசியில் இங்கே தானே வந்தாய்?" என்று ராமநாதன் கேட்டான்.

"நான் என்ன பண்ணுகிறது? இந்த ஸ்திரீகள் விஷயம்தான் உனக்குத் தெரியுமே."

"ஆமாம். ஆமாம்! நான்கூட அவளிடம் குற்றாலம் வேண்டவே வேண்டாமென்று சொன்னேன். நான் அப்படிச் சொன்னதற்காகவே அவள் இங்கே வரவேண்டு'மென்று பிடிவாதம் பிடித்தாள்."

"இங்கே சாரல், ஸ்நானம், காற்று எல்லாம் சுகமாய்த்தா னிருக்கிறது. ஆனால் நல்ல காபி அகப்பட மாட்டேனென்கிறதே. அதை நினைத்தால்தான் வருத்தமா யிருக்கிறது" என்றான் சிதம்பரம். அப்பொழுது கோமளமும் மீனாட்சியும் பேசுவது அவர்கள் காதில் விழவே இவர்கள் தங்கள் பேச்சை நிறுத்திக் கொண்டனர்.

"கடைசியில் நாம் தீர்மானித்த படியேதானே முடிந்தது" என்றாள் மீனாட்சி.

"குற்றாலம் இவ்வளவு நல்ல இடமென்று தெரிந்திருந்தால் போன வருஷமே வந்திருப்பேனே. ஒருதரம் ஸ்நானம் பண்ணுகிறதற்குள்ளேயே எவ்வளவோ சுகமா யிருக்கிறது. அருவியையும், மலையையும், மரஞ்செடி கொடிகளையும் இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலிருக்கிறது. ஆமாம், இங்கே வருவதில் வேறு சௌகரியங்களும் இருக்கிறது என்றாயே, என்ன அது?" என்று கோமளம் கேட்டாள்.

"அதுவா! பங்களூர் போன்ற ஊர்களுக்குப் போனால், அவர்கள், அந்த சிநேகிதனைப் பார்க்கப் போனேன், இந்த சிநேகிதனைப் பார்க்கப் போனேன், பக்கத்து ஊர் வரையில் போய்விட்டு வந்தேன் என்று ஏதாவது சாக்குச் சொல்லி நம்மைக் கழித்துக் கட்டிவிட்டுத் தப்பிப் போய் விடுவார்கள்."

"இங்கே?"

"இங்கேயோ அவர்கள் அந்தச் சாக்கெல்லாம் சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாது. நம்மைத்தான் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்க வேண்டும்" என்று மீனாட்சி சொல்லியதும் இரண்டு பேரும் களுக்கென்று சிரித்தார்கள்.

ராமநாதனும் கோபாலனும் ஒருவரையொருவர் பார்த்துத் தலையை ஆட்டிக் கொண்டார்கள். பெண்மணிகளின் பேச்சு முடிந்ததும் அருவி விழும் சப்தம் அந்த நண்பர்களின் காதில் விழுந்தது.

---

ஆனந்தமாக லிப்டன் தேனீர் அருந்தும்போது பொறுப்பற்ற பேச்சுக்களைப் பேசாதீர்கள்.

★ அடித்தவனே அழுதான்; அடிபட்டவள் அழவில்லை? ........

# உடைந்த வளையல்

**தொடர்கதை** — து.ரா. —

**பதினெட்டாம் அத்தியாயம்**
**அகப்பட்டுக்கொண்டான்!**

தங்கமணி மதுரத்தின் அறைக்கு ஏன் வந்தான்? அவன் அன்று இரவு திடீரென்று தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டான். சிறிது நேரம் திறந்த கண்ணை மூடாமல் அப்படியே இருட்டில் அண்ணாந்து பார்த்துக் கொண்டு படுத்திருந்தான். பக்கத்தில் படுத்திருந்த சுசீலாவுக்கு நிம்மதியான தூக்கம். அவள் ஸ்வாசக் காற்று தங்கமணியின் கழுத்தருகில் வெது வெது என்று பட்டது.

தங்கமணிக்கு மறுபடி உடனே தூக்கம் வரவில்லை. ஒருவித நினைவும் இல்லாமல் சிறிது நேரம் சுத்த சூன்யமாய் இருந்த மனத்துடன் படுத்திருந்தான்.

பிறகு திடீரென்று மதுரத்தின் ஞாபகம் வந்தது. அன்று மத்தியானம் நடந்த விஷயமும் அடுத்தாற்போல் மனதில் தோன்றிற்று. உடனே தலையைச் சாய்த்து, பக்கத்தில் படுத்திருந்த சுசீலாவின் முகத்தைப் பார்த்துவிட்டுத் தனக்குள் சிரித்துக் கொண்டான். என்ன பொறுமை சுசீலாவுக்கு? அடேயப்பா; என்ன சந்தேகம, என்ன சந்தேகம்? —

தான் செய்ததில் ஏதாவது தவறு உண்டா என்று தங்கமணி யோசித்தான். தன் நிலைமையில் வேறு யார் இருந்தாலும் அப்படித்தான் செய்திருப்பார்கள். ஆனால், சுசீலாவின் ஸ்தானத்தில் வேறு எந்த ஸ்திரீ இருந்தாலும், ஒரு வேளை அவளைப் போல் தான் பொறுமையும் சந்தேகமும் படுவாளோ என்னவோ? —

"இத்தனைக்கும், நாம் செய்யும் காரியம் சுசீலாவுக்குப் பிடிக்காது என்று அந்தச் சமயத்தில் நமக்குத் தோன்றவே இல்லையே. ஏன் தோன்றவில்லை? நாம் தப்புப் பண்ணுகிறோம் என்று தோன்றினாலல்லவா இந்த எண்ணங்களெல்லாம் வரப்போகிறது? பரமார்த்தமாய் நாம் காரியம் செய்கிறோம்; அதிலே சுசீலா எவ்வளவு அர்த்தங்களையும் அனர்த்தங்களையும் கற்பித்துக் கொள்ளுகிறாள் —" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

மறுபடியும் அவன் மனம் மதுரத்தைப் பற்றி நினைத்தது. அவளுக்குத் தேள் கொட்டின வலி போய்விட்டதா என்று தான் அவளையாவது சுசீலாவையாவது கேட்காமல் இருந்து விட்டது ஞாபகம் வந்தது. சுசீலாவாவது அவளை விசாரித்தாளோ அல்லது தன் கோபத்தில் ஒன்றையும் கவனியாமல் இருந்து விட்டாளோ? அன்றிரவு சுசீலாவே அவனுக்குச் சாதம் பரிமாறினாள். மதுரம் சமையல் அறைக்கு வெளியே தலைகாட்டாததால், வலி குறைந்து விட்டதா என்று அவளைக் கேட்க அவனுக்குச் சந்தர்ப்பமே கிட்டவில்லை. அதை இப்பொழுது நினைத்துக் கொண்டபோது அவன் மனம் சஞ்சலம் அடைந்தது. அடடா, என்ன அலக்ஷியமாய் இருந்து விட்டோம்? நம் கூடப் பிறந்த பிறப்பாயிருந்தால் இப்படியா இருப்போம்?

இந்த எண்ணம் தோன்றியதும் தங்கமணி சட்டென்று போர்வையை எடுத்தெறிந்து விட்டுக் கட்டிலிலிருந்து ஓசை சந்தடி செய்யாமல் இறங்கினான். இன்னும் தேள் கடியினால் அவள் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தால், தூங்காமல் விழித்துக் கொண்டிருப்பாள். இல்லை, வலி போய் விட்டது என்றால் தூங்கிப் போயிருப்பாள். இரண்டிலொன்று தெரிந்து கொள்ளாத வரையில் அவன் மனது சமாதானமடையாது போல் தோன்றிற்று. அறையை விட்டு வெளிக் கிளம்பி மாடிப்படிகளில் இறங்கி, மதுரத்தின் அறையை அடைந்து முக்கால்வாசி சாத்தியிருந்த கதவைத் திறந்தான்.

வாயிற்படியில் தங்கமணி வந்து நிற்பதைப் பார்த்ததும் மதுரம் திடுக்கிட்டு எழுந்து நின்றாள்.

"கை வலி எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

"இப்பொழுது ஒன்றும் வலி இல்லை—"

"பின் ஏன் இன்னும் நீ தூங்கவில்லை?"

மதுரத்திற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

"கை இன்னும் வலிக்கிறதா என்ன?"

"இல்லை; சாயங்காலம் வரையில் வலித்துக் கொண்டுதான் இருந்தது. இப்பொழுது வலி இல்லை."

"உனக்கு இங்கே தனியாக இருக்கப் பயமாயிருக்கிறதா என்ன?"

"இல்லை. பயத்துக்காகத்தான் விடிவிளக்கு வைத்துக் கொண்டிருக்கிறேனே."

"சரி வெறுமனே முழித்துக் கொண்டிருக்காதே. உடம்புக்கு ஆகாது" என்று சொல்லி விட்டுத் தங்கமணி திரும்பி மாடிக்குச் சென்றான்.

அவன் அறைக்குள் நுழைந்ததும் பளிச்சென்று விளக்கு எரிந்தது. தனக்கு எதிர் மூலையில் சுவரில் இருந்த ஸ்விட்சை அமுக்கி விட்டுச் சுசீலா அங்கேயே நின்று கொண்டு தன்னை வெறித்துப் பார்ப்பதைக் கண்டான்.

தங்கமணி கட்டிலருகில் போய் நின்றான். சுசீலா சுவரோரத்தில் நின்றபடியே "எங்கே போயிருந்தீர்கள்?" என்று கேட்டாள். அவள் பேச்சிலும் குரலிலும் வழக்கத்திற்கு மாறானதோர் நிதானம் காணப்பட்டது.

"மதுரத்தை, கைவலி எப்படியிருக்கிறது என்று கேட்கப் போனேன், இப்பொழுது வலி இல்லையாம்—" என்று சொல்லிக் கொண்டே வந்து தங்கமணி சட்டென்று நிறுத்தி, கண்ணைக் கொட்டாமல் தானும் சுசீலாவை உற்று நோக்கினான். அந்தப் பார்வையில், தன் மனைவியின் மனதில் ஓடிக் கொண்டிருந்த எண்ணங்களைத் திட்டமாய் அவன் அறிந்துகொண்டான். அவன் முகம் சிவந்தது. வாயிலிருந்து வார்த்தை ஒன்றும் வெளிப்படாமல் உதடுகள் துடித்தன.

"பின்னே ஏன் இவ்வளவு சீக்கிரம் திரும்பி வந்துவிட்டீர்கள்? ஒரு வேளை, நான் முழித்துக் கொண்டேனோ என்று பார்த்து விட்டுப் போகலாம் என்றோ?—" என்று கேட்டாள் சுசீலா.

தங்கமணிக்குக் கோபம் கட்டுக்கடங்காமல் போய்விட்டது. இரண்டடியில் அவள் எதிரில் போய் நின்று, "என்ன சொன்னாய்?" என்றான்.

"ஏன் அதற்குள்ளே திரும்பி வந்து விட்டீர்கள் என்று தான் கேட்டேன்."

தங்கமணி, கோபத்தில் உடல் பதற கையை ஓங்கி அவள் கன்னத்தில் ஓர் அறை கொடுத்தான். சுசீலா பொத்தென்று சுவரின் மேல் சாய்ந்து கைகளை அகல விரித்துக் கொண்டு நின்றாள்—அவனை விழித்துப் பார்த்துக்கொண்டு.

அறைக்குள் எங்கும் நிசப்தமாயிருந்தது. கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள். கல்யாணமாகி ஏழு வருஷ இல்வாழ்க்கையில் மனைவியைச் 'சீ' என்று ஒரு வார்த்தை சொல்லியறியாத கணவன் இன்று கையை ஓங்கி அவளை அடித்து விட்டான்.

அடித்தான பிறகு, திடீரென்று, என்ன காரியம் செய்து விட்டோம் என்று அவனுக்குத் திகில் உண்டாயிற்று. உடல் வியர்த்தது. சுவரின்மேல் சாய்ந்து கொண்டு நின்ற சுசீலாவின் வெளுத்த முகமும், கலங்கியிருந்த அவள் கரு விழிகளும் அவன் ஹிருதயத்தைக் குத்தின. "அடடா, அடித்து விட்டோமே! டைபாயிட் வந்து சாகக் கிடந்து பிழைத்தவள்; இன்னும் உடம்பு முற்றிலும் சரியாகவில்லை—அடித்து விட்டோமே!—" என்று அவன் மனம் பதறியது.

மூச்சுத் திணற, அவள் அருகில் சென்று தோளைப் பிடித்துக் கொண்டு, "சுசீலா! சுசீலா! உடம்பு என்ன?" என்றான்.

அவள் அவன் கையைப் பிடித்துக் கொண்டாள். கோபமாக அவள் ஏதாவது சொல்வாள் என்று எதிர் பார்த்தான். சொல்லியிருந்தால் அவன் சமாதானப் படுத்தியிருப்பான். அல்லது மேலே சண்டையாவது போட்டிருப்பான். ஆனால் அவள் "ஒன்றுமில்லை" என்றாள், இன்னும் அவனை முன்போல் விழித்துப் பார்த்துக் கொண்டே.

தங்கமணியின் கண்களில் நீர் துளித்துப் பார்வையை மறைத்தது. அடிபட்டவள் அழவில்லை; அடித்தவன் அழுதான். அவனால் மேலே ஒன்றும் பேச முடியவில்லை.

விளக்கை அணைத்து விட்டு மறுபடி இருவரும் படுத்துக் கொண்டார்கள்.

"தூங்குகிறாயா சுசீலா?" என்று தங்கமணி கேட்டான்.

"ஊம், நீங்கள் தூங்குங்கோ. நாளைக்கு ஆபீஸுக்குப் போகவேண்டுமே" என்றாள் அவள்.

இருவரும் அசையாமல் படுத்துக் கொண்டிருந்தார்கள்; அசைந்தால் மற்றவர் தூக்கம் கெட்டு விடுமே என்று. ஆனால் இருவரும் வெகு நேரம் தூங்கவில்லை. "சுசீலா தூங்கி விட்டாள். நான் அவளை அடித்து விட்டேனே—" என்று தங்கமணி மனதுக்குள் புலம்பிக் கொண்டிருந்தான்.

"அவர் தூங்கிப் போய்விட்டார், நான் அவருக்கு ரொம்பக் கோபம் வரப் பண்ணி விட்டேன்—" என்று நினைத்துக் கொண்டாள் சுசீலா.

## பத்தொன்பதாம் அத்தியாயம்
## ராஜம்மாளின் கைங்கரியம்

மதுரத்துக்குக் கடிதம் அனுப்பிய பிறகு பஞ்சு ஊரை விட்டுப் பம்பாய்க்குப் போய்விட்டான். அவன் கூறியதைப் பற்றி எப்படியாவது சுசீலாவுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று ராஜம்மாள் துடிதுடித்தாள். அதற்காக ஒரு நாள் சுசீலாவின் வீட்டுக்கு வந்தாள். ஆனால் திடும் என்று பிரஸ்தாபிக்காமல் பேச்சு வாக்கில் இரண்டு வார்த்தை போட்டு வைப்பதுபோல் இருக்க வேண்டும் என்று கருதினாள். ஆகையால் சமையலைப் பற்றியும், வீட்டு விஷயங்களைப் பற்றியும் பேசத் தொடங்கி, அதிலிருந்து மதுரத்தின் ஞாபகம் வந்தது போல் காட்டிக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தாள்.


சுசீலா தானே கேட்டைத் திறக்க ஓடினாள்.....

ஆனால் சுசீலாவோ ஒரு விஷயத்தைப் பற்றியும் அவளை அதிக நேரம் பேச விடாமல் சட்சட்டென்று பேச்சை மாற்றினாள். சுசீலாவின் மனதிலும் ராஜம்மாளைப் போலவே ஒரு விஷயத்தைப் பற்றிய விவரங்களை அறிய வேண்டும் என்ற ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது. சம்பாஷணையைப் பஞ்சு சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு இழுத்துக் கொண்டு போனாலாவது ராஜம்மாள் வாயிலிருந்து ஏதாவது வெளிப்படுகிறதா பார்க்கலாம் என்று அவளும் தீர்மானித்திருந்தபடியால் சம்பாஷணை நெடு நேரம் ஒருவர் கையிலும் அகப்படாமல் நழுவிக்கொண்டே இருந்தது. கடைசியில் சுசீலா பொறுமையை இழந்து, "ஏன் மன்னி, உங்கள் தம்பியை எங்கேயோ காணும் என்று சொல்லிக் கொண்டிருந்தார்களே, அவர் எங்கே போயிருக்கிறார் என்று அப்புறம் தெரிந்ததா?" என்று கேட்டாள்.

ராஜம்மாள் சற்று மௌனமாய் இருந்த பின், இதையே நாமும் உபயோகப்படுத்திக் கொள்வோமே என்று தீர்மானித்து, "எங்கே போனானோ, அவன், தறிதலை! எக்கேடாவது கெட்டுப் போகட்டும், நமக்கென்ன? சுத்தத் தத்தாரி!" என்று கூறி விட்டுக் குரலைத் தாழ்த்திக் கொண்டு, "அவனுக்குக் கூடக் கடிதாசி என்னமோ எழுதிப் போட்டானாமே அவன்?" என்று சமையலறைப் பக்கம் கண்ணைக் காட்டினாள்.

சுசீலா ஆச்சரியத்துடன், "அதென்ன அது?" என்றாள்.

"ஏண்டி, உனக்குத் தெரியாதா, என்ன? உன் கிட்டே கூடச் சொல்லாமே உன் ஆம்படையான் கிட்டே சொல்லியிருக்கிறானே! நன்னாயிருக்கு!"

"எதைச் சொல்கிறீர்கள், தெரியவில்லையே?" என்றாள் சுசீலா.

"நீ ஜுரமாயிருந்தபோது நடந்தது. மதுரம் கிணற்றுக்குப் போகிறபோது பஞ்சு என்னமோ கன்னாபின்னாவென்று எழுதி அவள்கிட்டே போட்டானாம். அவள் ஆத்துக்கு ஓடி வந்து அழுதுகொண்டே உன் ஆம்படையான்கிட்டே சொன்னாளாம். அதற்கப்புறம் தான் அவன் அவளை ஜலத்துக்குப் போக வேண்டாம் என்று ஒரு ஆணை வைத்துவிட்டான். அதுகூட உனக்குத் தெரியாதா?"

"ஊஹூம், என்னிடம் சொல்லவில்லை அவர்."

ராஜம்மாள் 'ஹூம்!' என்று ஒரு பெருமூச்சு விட்டாள்.

"அதற்குத்தான் நான் முன்னமே உன்னிடம் சொன்னேன்; நீயும் சிறிசு, உன் ஆம்படையானும் சிறிசு. இந்தப் பெண்ணைக் கொண்டுவந்து ஆத்திலே வைத்துக் கொள்ளப்படாது என்று. ஊரில் பேசிக் கொள்கிறது காது கொடுத்துக் கேட்க முடியவில்லை."

சுசீலாவின் ஹிருதயம் வேகமாக அடித்துக் கொண்டது. ராஜம்மாள் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் புண்ணில் ஊசி குத்துவதுபோல் அவள் ஹிருதயத்தில் குத்திற்று. தன் கணவன் எப்படியிருந்தாலும் அவரைப் பற்றி அயலார் எல்லாரும் கன்னா பின்னா என்று பேசும்படி ஆகிவிட்டது என்பதை நினைத்தபோது அவள் நெஞ்சம் பதைத்தது. ஆகையால் கோபத்துடன், "யார் எது வேண்டுமானாலும் பேசிக் கொள்ளட்டும் மன்னி. எல்லாம் சுத்தப் பொய். ஊராருக்கெல்லாம் நம்ப மனுஷாள் குணம் என்ன தெரியும்? ஆனால் எனக்கு என் ஆத்துக்காரர் குணம் தெரியாதா என்ன? நான் ஒன்றையும் நம்ப மாட்டேன்" என்றாள்.

"அதென்னமோ அம்மா! என் காதில் பட்டதைச் சொன்னேன்" என்றாள் ராஜம்மாள்.

அப்பொழுது தங்கமணி காரின் ஹாரன் சப்தம் தூரத்தில் கேட்டது. ஏனென்றால் அவன் தெருக் கோடியில் வரும்பொழுதே காரின் ஹாரனை ஒரு தரம் அமுக்குவது வழக்கம், வீட்டிலுள்ளவர்கள் கேட்டைத் திறந்து வைக்கட்டும் என்று. சுசீலாவிடம் தங்கமணியைப் பற்றி அவதூறு சொன்ன பிறகு அவளுக்கு அவன் வரும் சமயம் அங்கிருக்க இஷ்டமில்லை. "எனக்கு வீட்டில் அவசர வேலையிருக்கிறது" என்று சொல்லி எழுந்தாள். தங்கமணி வந்த பிறகு போகலாம் என்று சுசீலா சொல்லியும் கேட்காமல் அவள் பக்கத்திலிருந்த சந்து வழியாக வீட்டுக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

தங்கமணியின் கார் வீட்டு வாசலில் வந்து நின்றது. அன்று அவன் சீக்கிரம் வந்து விட்டபடியால், தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த வேலைக்காரன் காதில் ஹாரன் சப்தம் விழவில்லை.

"முத்தையா! முத்தையா!" என்று தோட்டக்காரனைச் சுசீலா கூப்பிட்டாள். அவன் வராதபடியால் தானே கேட்டைத் திறக்க வந்தாள். அவள் வருவதைப் பார்த்துத் தங்கமணி காரை விட்டு இறங்கித் தானே கேட்டைத் திறந்து கொண்டான்.

அன்று அவன் முகம் மிகவும் சோர்வடைந்து காணப்பட்டது. சுசீலா கொடுத்த காப்பியைக் குடித்துக் கொண்டே அவன், "நான் கராச்சி போகப் போகிறேன்" என்றான்.

அந்தச் செய்தி அவளைத் திடுக்கிடச் செய்யுமென்று நினைத்தான். ஆனால் அவள் "ஓஹோ" என்று சர்வ சாதாரணமாய்க் கேட்டபோது அவனடைந்த ஆச்சரியத்துக்கு அளவில்லை.

(தொடரும்)

---

# தாமதம் ஏன்?



"அவன் என்னோடு பேச ஆரம்பித்து ஐந்து நிமிஷங்கூட ஆகவில்லை; அதற்குள் என்னை முட்டாள் என்று சொல்லி விட்டான்."

"இதற்கு இவ்வளவு தாமதமேன்?"



# காலக்ஷேபம்

### இந்த ஆசாமி!

டாக்டர் (மயக்கம் போட்டிருந்த நோயாளியைப் பார்த்து):— இறந்து விட்டான் போலிருக்கிறதே.

நோயாளி :—இல்லை, இல்லை, நான் உயிரோடுதானிருக்கிறேன்.

நர்ஸ் :—சும்மா இரு! டாக்டரைவிட உனக்கு என்ன தெரியும்?

—ஆர். கே. வேதா பாய்.

●

### முன் யோசனை

ராமன் :—ஏண்டா, குப்புஸாமி! இன்றைக்கு ஆபீஸுக்கு டிபன் கொண்டு வல்லையாடா?

குப்புஸாமி :—அதை யாரு கட்டித் தூக்கிண்டு வரதுன்னுட்டு காலமே வீட்டிலேயே சாப்பிட்டு வந்து விட்டேன்.

—கே. ராமமூர்த்தி.

●

### பிரகஸ்பதி!

குப்பு (சைக்கிளில் வேகமாகப் போகும் ராமுவைப் பார்த்து) :—என்னடா இவ்வளவு வேகமாகப் போகிறே?

ராமு :—பிரேக் சரியாப் பிடிக்கல்லே. ஏதாவது விபத்து ஏற்படுவதற்கு முன்னால் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துடலாம்னுதான் வேகமா ஓட்டறேன்...!

—வி. ஜி. சிவஸ்வாமி.

●

### அதைத்தான்

கணவன் :—என்னத்தைத் தொலைத்துவிட்டு இப்படி ஒரு நாழியாகத் தேடுகிறாய்?

மனைவி :—நீங்கள் வீட்டில் ஏதேனும் சாமான்கள் காணமற் போய்விட்டால் அவற்றைப் பற்றிக் குறித்து வைத்துக் கொள்ள ஒரு டயரி கொடுத்திருக்கிறீர்களல்லவா, அதைத்தான்!

—கே. வெங்கடகிருஷ்ணன்.

### சிரமம் வேண்டாம்

புஸ்தகக் கடைக்காரன் :—கணக்குப் போடச் சிரமப்பட வேண்டியதே இல்லை. இந்த ஒரு புஸ்தகத்தை வாங்கினையானால், உன்னுடைய வேலையில் சரிபாதி குறைந்து விடும்.

பையன் :—அப்படியானால், இரண்டு புஸ்தகமாகக் கொடும்!

—முகம்மது சிராஜ்.

●

### ரொம்ப சுலபம்

"ஒரு நாவல் எழுதலாம் என்று ஆசையாக இருக்கிறது. உனக்கு எப்படி எழுதுகிறது என்று தெரியுமா?"

"ஓ! சிரமமொன்றுமில்லை. முழுவதும் டைப் அடித்துவிட்டால் போகிறது."

—கே. வி. சீனு.

●

### யோக்கியதாம்சம்!

எஜமானர் (புதிதாக வேலைக்கு வந்தவனிடம்) :— நீ முன்பு இருந்த இடத்தை விட்டு ஏன் தள்ளிவிட்டார்கள்?

வேலைக்கு வந்தவன் :—எல்லாம் எனது நன்னடத்தையின் பலனாகத் தானுங்க.

எஜமான் :—என்ன? நீ சொல்வது எனக்குப் புரியவில்லையே.

வேலைக்கு வந்தவன் :—ஆமாங்க! என் நன்னடத்தையைக் கண்டு, ஜெயிலதிகாரிகள் என் தண்டனையில் மூன்று மாதம் குறைத்து முன்னதாகவே விடுதலை செய்து விட்டார்கள்!



—என். வி. துரைசாமி.

# பாப்பா மலர்



ஆசிரியர் "தம்பி" எழுதுகிறார்...



யானை என்பது காகம் போன்ற ஒரு வெண்மை யான பட்சி.





அது ஆகாயத்தில் ஆனந்த மாய்ப் பறக்கும். குழந்தை கள் அதைப்பிடித்துக் கொண்டு வந்து,





கூண்டிலடைத்துக் குஷியாக விளையாடுவார்கள்.







திமிங்கிலம் என்பது காட்டில் உலாவும் ஒரு அழகான மிருகம். அதற்குத் தண்ணீரைக் கண்டால் ரொம்பபயம். மழைபெய்தால் அது குடையைப் பிடித்துக் கொண்டு...



ஓட்டலுக்குப் போய்க் காப்பி சாப்பிடும். சந்தோஷத்தில் தன்னை மறந்து....



வெள்ளிமூக்குக் குதிரையைப் போல் குதூகலமாய்ப் பாடும். அந்த வேடிக்கையைப் பார்ப்பதற்கு.....

ஆகாயத்தில் உள்ள மீன்கள் எல்லாம் வந்து கூடும்.





# நமது மாகாணத்தின் சகல பண்டங்களுக்கும் புதிய போக்கு வரத்து சாதனங்கள்

கீழ்க்கண்ட ஊர்களிலிருந்து ஊர்களுக்கு லாரி மூலம் உங்களுடைய வியாபார விவசாய பண்டங்களை வீட்டுக்கு வீடு கொண்டு போய்ச் சேர்க்க ஏற்பாடு செய்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ ராமவிலாஸ் சர்வீஸ் லிமிடெட்

**202/203, மௌண்ட் ரோடு, மதராஸ்.**

**போன்: மதராஸ் "8536" :: தந்தி: "ROADHAUL" மதராஸ்**

**கிளை ஆபீஸ்கள்:**

1. செரி ரோடு, சேலம்.
2. ஈஸ்வரன் கோவில் தெரு, கோயமுத்தூர்.
3. கண்டோன்மெண்ட், திருச்சினுப்பள்ளி.
4. கிருஷ்ணராயர் தெப்பகுளத் தெரு, மதுரை.
5. ஸ்ரீ நரசிம்ம ராஜா ரோடு, பெங்களூர்.

**—: மார்க்கங்கள் :—**

1. மதராஸ் — சித்தூர் — பெங்களூர்
2. மதராஸ் — வேலூர் — சேலம் — கோயமுத்தூர்
3. மதராஸ் — திருச்சி — மதுரை — திருநெல்வேலி
4. கோயமுத்தூர் — கள்ளிக்கோட்டை
5. கோயமுத்தூர் — கரூர் — திருச்சினுப்பள்ளி
6. சேலம் — நாமக்கல் — திருச்சினுப்பள்ளி
7. சேலம் — உளுந்தூர்ப்பேட்டை — கடலூர்
8. மதுரை—திருச்சினுப்பள்ளி—தஞ்சாவூர்—நாகை
9. மதுரை — திருச்சி — கும்பகோணம் — நாகை



**உங்களது பணியைச் செய்ய எப்போதும் காத்துள்ளோம்.**

★ கதையின் முடிவு சாதாரணமாய்க் கடைசியில் தான் தெரிவது வழக்கம். இந்தக் கதையிலோ முடிவு ஆரம்பத்திலேயே தெரிந்து விடுகிறது. சுபமான கல்யாண முடிவுதான்.

# என் தெய்வம்

"கல்கி"

திருநீர் மலையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எனக்கு வெகு காலமாக இருந்து வந்தது. ஆங்கிலக் கதைகளில் 'கிரெட்னு கிரீன்' என்னுமிடத்தைப் பற்றிச் சொல்கிறார்களே, அந்த மாதிரி நம் தமிழ் நாட்டுக்குத் திருநீர் மலை என்று கேள்விப் பட்டிருந்தேன். தொல்காப்பியர் காலத்துத் தமிழ் நாட்டை இந்தக் காலத்தில் திருநீர் மலையில் காணலாம் என்றும் சொன்னார்கள். அதாவது காதல் மணம் செய்து கொள்ளத் தீர்மானிக்கும் ஒருவனும் ஒருத்தியும் திருநீர் மலையைத்தான் சாதாரணமாய்த் தேடி வருவது வழக்கமாம். எனவே, அந்த மலைக் கோயிலிலே அடிக்கடி காதல் திருமணங்கள் நடைபெறுமாம். இக் காரணங்களினால்தான் திருநீர் மலையைப் பார்க்க எனக்கு ஆசை உண்டாகி யிருந்தது. எனவே, சமீபத்தில் ஒரு நாள் திருநீர் மலையைப் பார்ப்பதற்காகப் பயணம் கிளம்பிச் சென்றேன். "விடியா மூஞ்சி எங்கேயோ போனால் எதுவோ கிடைக்காது" என்பார்களே, அதுமாதிரி நான் போன சமயம் பார்த்துத் திருநீர் மலை வேறு எங்கேயாவது போயிருக்குமோ என்று கொஞ்சம் மனதில் பயம் இருந்தது. நல்ல வேளையாக, திருநீர் மலை அப்படி யொன்றும் செய்து விடவில்லை. திருநீர் மலைக் கோயிலும் மலைமேலேயேதான் இருந்தது. இன்னும், நான் போன அன்று அந்தக் கோயிலில் ஒரு கல்யாணமும் நடந்தது. கல்யாணம் என்றால், எப்பேர்ப்பட்ட கல்யாணம்? மிகவும் அதிசயமான கல்யாணம்! தம்பதிகளையும் புரோகிதரையும் தவிர ஒரே ஒரு விருந்தாளிதான் கல்யாணத்துக்கு வந்திருந்தது! அந்த விருந்தாளி மணமகனின் தாயார் என்று தெரிந்து கொண்டேன்.

திருமங்கல்ய தாரணம் ஆகி மற்ற விவாகச் சடங்குகளும் முடிந்த பிறகு, புரோகிதர், "சுவாமி சந்நிதிக்குப் போய் முதலில் நமஸ்காரம் செய்யுங்கள்; அப்புறம் அம்மாவுக்கு!" என்றார். ஆனால், தம்பதிகள் இருவரும் சொல்லி வைத்தாற்போல், அம்மாவுக்கு முதலில் நமஸ்காரம் செய்தார்கள். ஆனந்தக் கண்ணீர் என்பதை அப்போது நான் பார்த்தேன். மணமக்களை அன்புடன் அணைத்து ஆசீர்வதித்த அந்த அம்மாளின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. கண்ணீர் என்றால் எப்படி? ஒரே அருவிதான்!

இதையெல்லாம் பார்த்து என்னால் தாங்க முடியவே யில்லை. இந்தக் கல்யாணத்தில் ஏதோ விஷய மிருக்கிறதென்றும், அதைத் தெரிந்து கொள்ளாமல் திருநீர் மலையை விட்டுக் கிளம்புவதில்லை யென்றும் முடிவு செய்து கொண்டேன். மாப்பிள்ளைப் பையனுடன் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து சிநேகம் செய்து கொண்டு கொஞ்சங் கொஞ்சமாக அவர்களுடைய வரலாற்றை அறிந்தேன். இதோ அந்த வரலாறு :—

## 1

சாம்பமூர்த்தி பி. ஏ. அவனுடைய தாயாருக்கு ஒரே பிள்ளை. அவர்கள் பரம ஏழைகள். சாம்பமூர்த்தியினுடைய சிறு பிராயத்தில் அவன் தாயார் பட்ட கஷ்டங்கள் சொல்லத்தரமல்ல. ஓட்டலில் இட்டிலிக்கு மாவு அரைத்தும், இன்னும் பிரபுக்கள் வீட்டில் ஊழியம் செய்தும் அவன் காலட்சேபம் நடத்தியதுடன், பிள்ளையையும் படிக்க வைத்து வந்தாள். சாம்பமூர்த்தி நல்ல புத்திசாலி. கொஞ்சம் விவரம் தெரிந்ததும், பள்ளிக்கூடத்தில் உபகாரச் சம்பளம் வாங்கிக் கொண்டதோடு, அவனை விடச் சின்ன வகுப்புப் பிள்ளைகளுக்கு வீட்டில் பாடம் சொல்லிக் கொடுத்தும் பணம் சம்பாதிக்கத் தொடங்கினான். வறுமையின் கஷ்டம் எவ்வளவோ இருந்தபோதிலும், தாயும் பிள்ளையும் பரஸ்பரம் கொண்டிருந்த அன்பின் காரணமாக, அவர்களுடைய வாழ்க்கை சந்தோஷமாகவே போய்க் கொண்டிருந்தது.

கடைசியாக, அவர்களுடைய தரித்திரம் தீரும் காலமும் வந்தது. பி. ஏ. பரீட்சையில் சாம்பமூர்த்தி முதல்தரமாகத் தேறினான்.

சுருக்கெழுத்து, டைப் அடித்தல் முதலியவை யும் கற்றுக் கொண்டிருந்தான். எனவே, சென்னைப் பட்டணத்தில் மாதம் அறுபது ரூபாய் சம்பளத்தில் அவனுக்கு உத்தியோகம் கிடைத்தது. அதாவது, உத்தியோகத்துக்கு உத்தரவு வந்து விட்டது. சென்னைக்குப் போய் ஒப்புக் கொள்வதுதான் பாக்கி.

ஊரை விட்டுப் போகு முன்னம் சாம்ப மூர்த்தி நிச்சயம் செய்து கொள்ள விரும்பிய காரியம் ஒன்றே ஒன்று பாக்கி யிருந்தது. அது, அவனுடைய கல்யாண விஷயந்தான்.

கல்யாணம் என்றாலே சிக்கலான விஷயம்; அதில் காதலும் கலந்திருந்தால் கேட்கவே வேண்டியதில்லை.

சாம்பமூர்த்தியின் கல்யாணம் அவ்வாறு சிக்கலடைந்திருந்தது.

ஆமாம்; சாம்பமூர்த்தி காதல் நோய்க்கு ஆளாகி யிருந்தான்.

ஒரு வக்கீலின் குழந்தைகளுக்குச் சாம்ப மூர்த்தி அவர்கள் வீட்டிலே பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். அந்த வக்கீ லின் இளம் சகோதரி ஒருத்தியும் வீட்டில் இருந்தாள். அவள் லட்சணமான பெண். எஸ். எஸ். எல். ஸி. வரையில் படித்தவள்.

"காதல் ஏன் வருகிறது? எப்படி வரு கிறது?—என்றெல்லாம் சொல்ல முடியாது. அது தேவ ரகசியம்!" என்று ஒரு பிரசித்தி பெற்ற ஆசிரியர் சொல்லி யிருக்கிறார். அத்தகைய தேவ ரகசியமான காரணத்தினாலே, ரங்கநாயகிக்கும் சாம்பமூர்த்திக்கும் காதல் வந்து விட்டது.

வேடிக்கை என்னவென்றால், சாம்ப மூர்த்தியும் ரங்கநாயகியும் தங்களைக் காதல் நோய் பீடித்திருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்கு முன்னாலேயே அந்த விஷ யத்தை வீட்டிலுள்ள மற்றவர்கள் தெரிந்து கொண்டார்கள். இதிலே ஆச்சரியமும் இல்லை. ஏனெனில், எப்பேர்ப்பட்ட கெட்டிக்காரர்க ளானாலும் காதலுக்கு வசமாகி விட்டால் அவர்கள் முகத்தில் ஒரு மாதிரி அசடு தட்டி விடுகிறது. அவர்கள் ஒருவரை யொருவர் பார்க்கும்போது அசடு வழியப் பார்க் கிறார்கள்; அசடு வழியப் பேசுகிறார்கள். அவர்களுடைய நடை, உடை, பாவனை எல்லாமே ஒரு மாதிரி மாறுதல் அடைந்து காணப்படுகிறார்கள். இதை யெல்லாம் மறைத்துக் கொள்ளும் சக்தியும் அவர்களுக்கு இருப்பதில்லை.

ரங்கநாயகியின் இந்த நிலைமை வீட்டி லுள்ளவர்களுக்கு நன்றாய்த் தெரிந்து விட்டது. அதற்கு முன்னாலெல்லாம் ரங்கநாயகி படிப்பிலேதான் அதிக ஆசையுள்ளவளா யிருந்தாள். பள்ளிக்கூடத்துப் பரீட்சைகளில் முதலாவதாகத் தேற வேண்டுமென்பதே அவளுடைய வாழ்க்கையின் இலட்சியம் போல் தோன்றியது. ஆடை அலங்காரம் முதலியவற்றில் அவள் அதிக கவனம் செலுத் துவதில்லை.

கொஞ்சகாலமாக இந்த நிலைமை மாறி விட்டது. வீட்டிலே ஒரு வருஷத்துக்கு ஆகும்படியாக மை கூட்டி வைத்திருந்தது; அதையெல்லாம் ரங்கநாயகி வழித்து வழித்துக் கண்ணில் பூசிக் கொண்டு தீர்த்து விட்டாள். அது மாதிரியே சோப்புக் கட்டிகள், பவுடர் பெட்டிகள், கூந்தல் தைலங்கள் எல்லாம் மளமள வென்று தீரத் தொடங்கின. தினசரி அலங்காரத்துக்கு அதிக நேரம் செலவாயிற்று. நெற்றியிலே பொட்டு, சிறிதாயும், பெரிதாயும், நீளமாயும், அகலமாயும், உயரமாயும் — இப் படிப் பல உருவங்கள் எடுத்தது.

இவ்வாறெல்லாம் ரங்கநாயகி தன்னை அழகு செய்து கொள்வதற்கும், சாம்பமூர்த்தி பிள்ளைகளுக்குப் பாடஞ் சொல் லிக் கொடுக்க வருவதற்கும் ஒரு வகையான சம்பந்தம் இருப்பதை வீட்டார் சீக்கிரத்தில் கண்டு கொண்டார்கள்.

இன்னும், குழந்தைகளுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுப்பதில் சாம்பமூர்த்திக்குக் கவனக் குறைவு ஏற்பட்டதையும் அவர்கள் கவனித் தார்கள். பாடத்தைக் கவனித்துப் படிக்கும்படி சாம்பமூர்த்தி பிள்ளை



களைக் கண்டிப்பதற்குப் பதிலாக, பிள்ளைகள், "என்ன ஸார்! பாடத்தைக் கவனிக்காமல் எங்கேயோ பார்க்கிறீர்களே?" என்று கேட்கும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. இதன் முடிவான பலன் என்ன ஆயிற்று என்றால், வீட்டு எஜமான் சாம்பமூர்த்தியிடம், "பிள்ளைகளுக்குப் பாடமெல்லாம் வந்து விட்டது; நீர் சொல்லிக் கொடுத்தது போதும்" என்று சொல்லி அவனை நிறுத்தி விட்டார்.

சாம்பமூர்த்தி, ரங்கநாயகி இரண்டு பேருக்குமே அப்போதுதான் தங்களுடைய வியாதி எவ்வளவு தூரம் முற்றிப் போயிருக்கிறதென்று தெரிய வந்தது. ஒருவர் இல்லாவிட்டால் ஒருவர் உயிர் வாழ முடியாது என்று அவர்கள் அறிந்தார்கள். உயிர் வாழ்வதே முடியாத காரியம் என்றால், சாம்பமூர்த்தி சென்னைப் பட்டணத்துக்குப் போய் உத்தியோகம் பார்ப்பது எப்படி?

அப்போதுதான் ரங்கநாயகி, தான் படித்த பெண், அதோடு மேஜர் ஆனவள் என்பதை நினைவு கூர்ந்தாள். பெண் சுதந்திரத்தில் தனக்குள்ள ஆழ்ந்த பற்றையும் வெளிக் ·ண்பிக்க ஆரம்பித்தாள். அவளுடைய தமையனிடம், தனக்காக அவன் வரன் தேட வேண்டிய அவசியம் இல்லையென்றும், சாம்பமூர்த்தியின் மேல் தான் காதல் கொண்டு விட்டதாகவும், அவரையேதான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகவும் மனம் விட்டுச் சொன்னாள். இதை யார் ஆட்சேபித்த போதிலும் தான் பொருட்படுத்தப் போவதில்லையென்றும் கண்டிப்பாகத் தெரியப்படுத்தினாள்.

இதெல்லாம் சாம்பமூர்த்திக்கு ஒருவாறு தெரிந்தபோது, அவனும் தைரியத்தைக் கையில் எடுத்துக் கொண்டான்! (தைரியம் என்பது இங்கே பேனாவைக் குறிக்கும்.) ரங்கநாயகியின் தமையனுக்கு ஒரு கடிதம் எழுதினான். ரங்கநாயகியைத் தான் காதலிப்பதாகவும், வாழ்நாளெல்லாம் அவளுக்கு ஒரு குறையும் இல்லாமல் வைத்துக் காப்பாற்றுவதாகவும், அவளைத் தனக்குக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டுமென்றும் மரியாதையாகக் கேட்டுக் கொண்டான். அதோடு ரங்கநாயகியும் தன்னைக் காதலிக்கிறபடியால், மனமொத்த தங்களுக்கிடையில் குறுக்கே வந்து நிற்பதற்கு யாருக்குமே பாத்தியதை கிடையாது என்பதையும் குறிப்பிட்டிருந்தான்.

மேற்படி கடிதம் எழுதிச் சில நாள் வரையில் அதற்குப் பதில் வருமென்று சாம்பமூர்த்தி எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஒன்றும் வராமற் போகவே, நேரிலேயே பதிலைத் தெரிந்துகொண்டு திரும்புவதென்று சாம்பமூர்த்தி வக்கீல் வீட்டுக்குக் கிளம்பினான்.

வக்கீல் வீட்டு வாசலை அடைந்ததும், சாம்பமூர்த்திக்கு உள்ளே ஏதோ ரகளை நடந்து கொண்டிருக்கிறதென்று தெரிய வந்தது. நாலைந்து பேர் சேர்ந்தாற்போல் பேசுகின்ற சத்தம் கேட்டது. அந்த இரைச்சலுக்கிடையே ஒரு விம்முகின்ற குரல் — ஆங்காரம் நிறைந்த குரல் — சாம்பமூர்த்தியின் காதில் விழுந்து அவனுடைய நெஞ்சைப் பிளந்தது. அந்தக் குரல் ரங்கநாயகியினுடையதுதான் என்று சொல்ல வேண்டுமா?

ஒரு கண நேரத்திற்குள் சாம்பமூர்த்தி உள்ளே நடப்பது என்னவென்பதைக் கற்பனை செய்து கொண்டான். ரங்கம் தன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேனென்று பிடிவாதம் பிடிக்கிறாள். மற்றவர்கள் கூடாது என்று சொல்லி அவளை வற்புறுத்துகிறார்கள்! — இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பத்தில் தன்னுடைய கடமையென்னவென்பதை நிர்ணயிக்கவும் அவனுக்கு அதிக நேரம் ஆகவில்லை. ரங்கநாயகிக்குத் துணை



யாகப் போய் அவன் அருகில் நிற்க வேண்டியதுதான்; நின்று, அவளைச் சுற்றியுள்ள துஷ்ட மிருகங்களிடமிருந்து அவளைக் காப்பாற்றி அழைத்துப் போக வேண்டியதுதான். சந்தேகம் என்ன?

இலேசாகச் சாத்தியிருந்த வாசற் கதவைப் படீரென்று திறந்து கொண்டு சாம்பமூர்த்தி உள்ளே போனான். ஏறக் குறைய அவன் எதிர்பார்த்த காட்சிதான் அங்கே காணப்பட்டது. ரங்கநாயகி கண்ணீரும் கம்பலையுமாய் நின்றாள். கண்களிலிருந்து கண்ணீர் மையுடன் கலந்து வழிந்து கொண்டிருந்தது. வக்கீல் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தார். அவருடைய மனைவி, வயதான விதவை அத்தை, அக்கா, அத்திம்பேர் ஆகியவர்கள் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள். குழந்தைகள் பயந்த தோற்றத்துடன் அங்குமிங்கும் நின்றார்கள்.

இதை யெல்லாம் ஒரு கண நேரத்தில் சாம்பமூர்த்தி பார்த்தான். சகுந்தலை துஷ்யந்தனைப் பார்த்து "அட பாவி! என்னை விபசாரி என்றா சொன்னாய்?" என்று கேட்கும் காட்சி அவனுக்கு ஞாபகம் வந்தது. அந்தக் காட்சியில் சகுந்தலையின் மேல் தனக்கு ஏற்பட்ட இரக்கம், துஷ்யந்தன் மேல் உண்டான கோபம் எல்லாம் அப்படியே உள்ளத்தில் தோன்றின. சகுந்தலைக்கு அச்சமயம் தன்னால் உதவி யொன்றும் செய்ய முடியவில்லை. ஆனால், இப்போது ரங்கநாயகிக்கு உதவி செய்யும் சக்தி தன்னிடம் இருக்கிறது. அவளை இந்தப் பேய் பிசாசுகளிடமிருந்து காப்பாற்றி அழைத்துப் போக வேண்டியது தன்னுடைய கடமை. — இப்படி யெல்லாம் சில விநாடி நேரத்துக்குள் சாம்பமூர்த்தி சிந்தித்துத் தீர்மானித்துக் கொண்டு, ரங்கநாயகிக்கு எதிரே போய் நின்று அவளுடைய முகத்தைக் கம்பீரமாய்க் கருணை ததும்ப நோக்கினான்.

"ரங்கம்! இவர்கள் உன்னை ......" என்று ஆரம்பித்தான்.

சாம்பமூர்த்தி வந்ததிலிருந்தே, அங்கிருந்தவர்கள் அவ்வளவு பேருடைய முகமும் ஒரு மாதிரி யாகிவிட்டது. ரங்கநாயகியும் சட்டென்று தலை குனிந்து சேலைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

சாம்பமூர்த்தி பேச ஆரம்பித்தவுடனே, அவள் பளிச்சென்று தலை நிமிர்ந்து அவன் முகத்தை எறிட்டுப் பார்த்தாள். அவனுடைய பேச்சில் குறுக்கிட்டு, விம்முகின்ற குரலில், "ஸார்! இவர்கள் எல்லாம் உங்களைப்பற்றி..." என்று ஏதோ சொல்லத் தொடங்கினாள்.

இதற்குள், வக்கீல், கோபமான குரலில், "ரங்கம்! உனக்கு என்ன பைத்தியமா? இவனிடம் என்ன சொல்லப் போகிறாய்?" என்றார்.

ரங்கநாயகி இன்னும் ஆத்திரத்துடன், "ஆமாம்; நீங்கள் சொன்னதைத்தான் சொல்லப் போகிறேன். ஏன் மறைக்க வேண்டும்? ... ஸார்! இவர்கள் எல்லாரும் உங்கள் தாயாரைப் பற்றி அவதூறு சொல்கிறார்கள். உங்கள் தாயார் நடத்தைப் பிசகு உள்ளவராம். இன்னும் ... இன்னும் ... அவர் விதவையான பிறகு உங்களைப் பெற்றாராம். இந்த மாதிரி அபாண்டமான பொய் சொல்கிறவர்களிடம் நான் எப்படி இருப்பேன்? என்னை உடனே அழைத்துப் போங்கள்!" என்றாள்.

இந்தக் கர்ண கடூரமான வார்த்தைகளை ரங்கநாயகி சொல்லி முடித்தபோது அங்கே எல்லையற்ற நிச்சப்தம் குடி கொண்டது.

எல்லாரும் ஒரேயடியாகச் சாம்பமூர்த்தியின் முகத்தை நோக்கினார்கள். அந்த முகத்தில் சொல்ல முடியாத குரோதம் பொங்கிற்று. அவன் உடம்பெல்லாம் நடுங்கிற்று.

வக்கீல் "இன்று இங்கே கொலை விழப் போகிறது!" என்று தீர்மானித்துக் கொண்டார். போலீஸ் ஸ்டேஷனுக்கு எப்படிச் சொல்லி அனுப்புவதென்று யோசிக்கலானார்.

சாம்பமூர்த்தி ஏதோ பேசுவதற்கு முயன்றான். ஆனால், வாயிலிருந்து வார்த்தை ஒன்றும் வரவில்லை.

அடுத்த விநாடி, அவனுடைய முகம் தொங்கி விட்டது. முகத்தில் தோன்றிய குரோதமும் வேதனையாக மாறியது.

ஒரு நிமிஷம் இவ்விதம் சாம்பமூர்த்தி நின்று கொண்டிருந்தான். பிறகு, ஒரு வார்த்தையும் சொல்லாமல், யாருடைய முகத்தையும் பார்க்காமல், குனிந்த தலை நிமிராமல் அங்கிருந்து வெளியேறினான்.

அவன் வீட்டு வாசற்படியைக் கடந்த போது, "இப்போது என்ன சொல்கிறாய், ரங்கம்!" என்று வக்கீலின் குரல் கேட்டது. யாரோ சிரிக்கும் சத்தமும் கேட்டது. சிரிப்புக்கு நடுவில் விம்மல் ஒலியும் கலந்து வந்தது.

## 2

சாம்பமூர்த்திக்குத் தான் வீட்டுக்கு வந்து சேர்ந்தது எப்படி யென்றே தெரியாது. வீட்டு வாசலை அடைந்ததும்தான் அவனுக்குக்

கொஞ்சம் சுய நினைவு வந்தது. வீட்டுக்குள் நுழைந்து நேரே திண்ணையில் குப்புறப் படுத்துக் கொண்டான். பொங்கி வந்த அழுகையை அடக்கிக் கொள்ள முயன்ற போது, அது விம்மலாக வெளிப்பட்டது. அவனுடைய உடம்பைத் தூக்கித் தூக்கிப் போட்டது.

சற்று நேரத்துக்கெல்லாம் அவன் தாயார் அங்கே வந்தாள். குப்புறப் படுத்துக் கிடந்த புதல்வனைப் பார்த்தாள். கல்லும் கனியும் குரலில், "அப்பா! குழந்தை!" என்று சொல்லிக் கொண்டு அவன் முதுகின்மேல் கையை வைத்துத் தடவிக் கொடுக்கப் போனாள்.

சாம்பமூர்த்தி வெடுக்கென்று அவளுடைய கையைப் பிடித்துத் தள்ளினான். மறுபடியும் பலமாகக் குப்புறுத்திக் கொண்டான்.

தாயார் திடுக்கிட்ட குரலில், "குழந்தை! இதென்ன? ஏன் அழுகிறாய்? என் பேரில் என்ன கோபம்? நான் என்ன செய்தேன்?" என்றாள்.

சாம்பமூர்த்தி சட்டென்று எழுந்து உட்கார்ந்து, "என்ன செய்தாயா? என்னை எதற்காகப் பெற்றாய்?" என்று கத்தினான். கத்திவிட்டுத் தன் தலையில் இரண்டு தடவை அடித்துக் கொண்டான்.

தாயார் திகைத்துப் போய் அவனைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

சாம்பமூர்த்தி மேலும் "இந்த அவமானத்தை என்னால் இனிமேல் சகிக்கமுடியாது. தூக்குப் போட்டுக் கொண்டு செத்துப் போகிறேன்" என்று கத்தினான்.

தாயார் வேதனை நிறைந்த குரலில், "குழந்தை! இது எனக்கு வேண்டியது தான்" என்றாள்.

சாம்பமூர்த்தி நிமிர்ந்து பார்த்தான். அம்மாவின் கண்களில் இரண்டு துளி ஜலம் துளித்து நிற்பதைக் கண்டான்.

"ஐயோ! அம்மா! உன்னைப் பற்றி ஏன் இப்படிச் சொல்கிறார்கள்!" என்று அலறினான்.

தாயார் அவனை உற்றுப் பார்த்து, "குழந்தை! அவர்கள் வீட்டுக்குப் போனாயா? அவர்கள் ஏதாவது சொன்னார்களா? என்ன சொன்னார்கள்?" என்று கேட்டாள்.

"என்னத்தைச் சொன்னார்கள்? ஊரிலே எல்லாரும் சொல்லுவதைத்தான் அவர்களும் சொன்னார்கள்."

"குழந்தை! ஊரிலே எல்லாரும் என்ன சொல்கிறார்கள்! அதைத்தான் சொல்லேன்!" என்றாள் தாயார்.

"என் வாயால் சொல்லச் சொல்கிறாயா! சரி, சொல்கிறேன். எனக்குத் தகப்பனார் யார் என்று தெரியாது என்று சொல்கிறார்கள். நீ விதந்துவான பிறகு என்னைப் பெற்றதாகச் சொல்கிறார்கள். போதுமா? இன்னும் சொல்ல வேணுமா?" என்று சாம்பமூர்த்தி கூறித் தலையில் இன்னும் நாலு தடவை அடித்துக் கொண்டான். மறுபடியும் குப்புறப் படுத்துக் கொண்டான்.

இத்தனை நேரமும் நடையில் நின்று கொண்டிருந்த தாயார் திண்ணையில் சாம்பமூர்த்தியின் காலடியில் உட்கார்ந்தாள். தலை குனிந்து கைகளில் முகத்தை வைத்துக் கொண்டு சற்று நேரம் சும்மா இருந்தாள். பிறகு தலையை நிமிர்த்திக்கொண்டு, "குழந்தை! சாம்பு! எழுந்து உட்கார்! எத்தனையோ நாளாக உனக்கு உண்மையைச் சொல்ல வேண்டும், சொல்ல வேண்டும் என்று இருந்தேன். தைரியம் வரவில்லை. இப்போது கட்டாயம் சொல்ல வேண்டிய சமயம் வந்துவிட்டது. குழந்தை! எழுந்து உட்கார்ந்து கேள்!" என்றாள்.

(அடுத்த இதழில் முடியும்)

---

## சமயோசிதம்!



மளிகைக் கடை மாணிக்கஞ் செட்டியாரிடம் ஒரு பையன் ஓடி வந்து "இந்தாருங்கள் ஒரு ரூபாய்! உங்களுக்குத்தானே அம்மா பணம் கொடுக்க வேண்டும்?" என்றான்.

"எனக்குத்தான்; இப்படிக் கொடு!...... ஆமாம், நீ யார் வீட்டுப் பையன், தம்பி?"

## படித்துப் பார்

### அக்கினி ★

[ ஆசிரியர் : தாராசங்கர் பானர்ஜி ; மொழி பெயர்ப்பு : த. நா. குமாரஸ்வாமி ; பிரசுரம் : கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர் ; விலை ரூ. 2. ]

"நெருப்பு! நெருப்பு! நெருப்பு!!" அட்டைப் படத்தில் பயங்கரமாகத் தீட்டப்பட்டிருக்கும் நெருப்பைக் கண்டு நாம் மிரளாமல் புத்தகத்தைப் பிரித்துப் படித்தோமானால் முழுதும் அக்கினிப் பிழம்புகள் கொழுந்து விட்டு எரிவதைக் காண்கிறோம். கதாநாயகன் சந்திரநாதனின் தொழிற்சாலைகள் கக்கும் நெருப்பு என்ன, ஹரி என்ற படித்த முட்டாள் உள்ளே தாராளமாய் விட்டுக் கொண்டிருக்கும் 'நிரவரூபமான அக்கினி' என்ன, சோகக் கதாநாயகி மீராதேவி கட்டிக் கொண்டிருக்கும் நெருப்பு நிறமான புடவை என்ன, இவற்றுடன் கதையில் வரும் பலாப்பினியின் வெப்பு நிறமும் கூடச் சேர்ந்து 268 பக்கங்கள் கொண்ட இப் புத்தகத்தைப் 'பிரகாசிக்க'ச் செய்து கொண்டிருக்கின்றன. எல்லாவற்றையும் விட, பணம் சிற்றின்பம் போன்ற கானல் நீரைத் தேடி அலைபவர்கள் சந்திரநாத், ஹரி இவர்களைப்போல் ஏமாற்றம் என்கிற படு தீயில் விழுவார்கள் என்பதை ஆசிரியர் வெகு பக்குவமாக எடுத்துக் காட்டுகிறார். இந்த அக்கினிப் புத்தகத்தின் வெம்மையைக் கண்டு அஞ்சிவிடாமல் மொழிபெயர்க்க முன் வந்த ஸ்ரீ த. நா. குமாரஸ்வாமியைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

### காந்தி யார்? ★

[ ஆசிரியர் : வெ. சாமிநாத சர்மா. பிரசுரம் : தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை ; விலை : அணா எட்டு. ]

வாழ்க்கை வரலாறுகள் எழுதுவதில் பிரசித்தி பெற்ற வெங்களத்தூர் ஸ்ரீ சாமிநாத சர்மா யாரைப்பற்றி எழுதினாலும் ருசிகரமாகத்தான் இருக்கும். காந்தி மகானைப் பற்றி,—அதுவும், "காந்தி யார்?" என்ற ஆச்சரியமான கேள்வியைக் கேட்டுக் கொண்டு — எழுத ஆரம்பித்தாரானால், கேட்க வேண்டுமா?

### முஸ்லிம்களின் அரசியல் எழுச்சி ★

[ ஆசிரியர் : வி. என். ரங்கசாமி ஐயங்கார் ; பிரசுரம் : நரசிம்மராஜன் கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை. விலை அணா 12. ]

காங்கிரஸ் — லீக் பிணக்கினால் தேச சுதந்திரம் தடைப்பட்டு வருகிறதென்று நம்மில் பலர் சொல்லி வரும் சமயத்தில், இந்த நூலாசிரியர் தூக்கி வாரிப் போடும்படியான ஒரு விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். அதாவது, "காங்கிரஸ் — லீக் பிணக்கு தேசத்திற்கு நஷ்டத்தை விளைவிக்கவில்லை. இதற்கு மாறாகத் தேசம் விடுதலை யடையுங் காலம் துரிதமடைந்து வருகிறது என்பதில் ஐயமில்லை" என்று ஐயமறக் கூறுகிறார்.

## அரட்டைக் கச்சேரி

● என்னமோ, போங்கள்! ரொம்பப் பயமாய் இருக்கிறது!

பயமாய் இருந்தால் கூழ் மோர் காய்ச்சிச் சாப்பிடுங்களேன்! பயம் போய்விடும்.

உமக்கு எப்பவும் தமாஷ்தான் ஐயா!

பின் விஷயத்தைச் சொல்லாமல் பயமாய் இருக்கிறது என்றால் —

விஷயம் என்ன ஐயா, விஷயம்? பட்டணத்தில் இருக்கிற ஜனங்களை யெல்லாம் திரும்பவும் ஸென்ஸஸ் எடுக்கப் போகிறார்களாமே?

எடுத்தால் என்ன? நாளைக்கு அரிசி ரேஷன் பண்ணணும் என்றால் ஒவ்வொரு வீட்டிலும் எத்தனை நபர்கள் இருக்கிறார்கள் என்று தெரிய வேண்டாமோ?

அது என்னய்யா ரேஷன்? என்னமோ புரியாத வார்த்தையைச் சொல்லுகிறீரே?

ரேஷன் என்றால் பங்கீடு என்று அர்த்தம். ஒவ்வொரு வீட்டிலும் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்று தெரிந்தால் தானே பங்கிடு செய்ய முடியும்?

அதுதான் இந்த ஏ. ஆர். பி. காரர்கள் முன்னமேயே எடுத்து விட்டார்களே, திரும்பவும் எதற்காக எடுக்கவேண்டும்?

இந்த ஏ. ஆர். பி. காரர்களுக்குத்தான ஏதாவது வேலை வேணுமோ, இல்லையோ! தவிர, போன தடவை ரொம்பப் பேர் தப்பு விவரம் கொடுத்து விட்டார்களாம் —

தப்பு விவரம் கொடுத்தவர்களில் நானும் ஒருவன். அதான் பயமா யிருக்கிறது.

என்ன தப்பு விவரம் கொடுத்தீர்?

எனக்கு ஒரு பெண்ஜாதியும், குழந்தையும் இருப்பதாகச் சொல்லி விட்டேன்.

சரி, அகப்பட்டுக் கொண்டார் தும்மட்டிக் காய்ப் பட்டர்!

என்னய்யா பயமுறுத்துகிறீரே? ஏதாவது சிறைவாசம், கிறைவாசம் ஏற்படுமோ?

சிறைவாசம் வராது—கிரகவாசம் ஏற்படும்.

● அப்படி யென்றால்?

அவர்கள் மறுபடியும் ஸென்ஸஸ் எடுக்க வருவதற்குள் ஒரு கலியாணமும் பண்ணிக் கொண்டு விடும். ஒரு குழந்தையையும் சுவீகாரம் செய்து கொண்டுவிடும். கிரகவாசம் ஏற்பட்டு விடும். பிறகு நீர் தப்பு விவரம் கொடுத்ததிலிருந்து தப்பித்துக் கொண்டு விடலாம். என்ன சொல்கிறீர், ஒரு பெண் பார்க்கட்டுமா?

ஓஹோ! இப்பொழுது புரிந்தது! தங்கள் பெண்ணைச் சுலபமாக நம் கழுத்தில் கட்டி விடலாம் என்று பார்க்கிறீரோ? நல்ல வேடிக்கையில் நான் போய் விட்டு வருகிறேன், ஸ்வாமி! இல்லை, இல்லை, போய் விட்டுத் திரும்பி வரவே இல்லை!







# நல்ல சுகத்தை விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நாம் எல்லோரும் சுகத்தைத் தான் விரும்புகிறோம். பரம சுகம் நிறைந்த சிகரெட்டான டிலக்ஸ் டெனுரை இப்போது நம்மில் பலரும் சுலபமாக வாங்கி வெகு ஆனந்தமாக அனுபவிக்கலாம்.

ரஸிகர்களுக்கும் மெல்லிய தொண்டையுடையவர்களுக்கும் நாம் சொல்வது "ஒரு முறை நீங்கள் டெனுர் சிகரெட்டை அனுபவித்துப் பார்த்தால் என்ன?" அதை நீங்கள் நிச்சயமாக விரும்புவீர்கள் என்பதில் சந்தேகமில்லை.

பெரிய அல்லது ஸ்டாண்டர்டு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்



BY APPOINTMENT TO THE MOST HONOURABLE THE MARQUESS OF LINLITHGOW, VICEROY AND GOVERNOR GENERAL OF INDIA

# TENOR

## de luxe CIGARETTES





உங்களது
உத்தரவாதம்

டி லக்ஸ் டெனுர் சிகரெட்ஸ்

ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்

EASTERN LICENCEES — P. B. NO 9029 — CALCUTTA.

T-10 ACI

Regd. No. M. 4392

ரேடியோ என்ற பெயரிலேயே




முதன்மையானது மகத்தானது

## மாடல் 2126/ஏ, 1943 வருட புதிய மாடல்
## ஆறு வால்வுகள் ஏ. ஸி. மெயின்ஸ் மாடல்

பாண்டு ஸ்பெரெட் ட்யூனிங், எலிப்டிகல் ஸ்பீக்கருடன் கூடிய இப் புதிய மாடல் மார்க்கோனிபோன் ரேடியோவைக் கேட்டு அனுபவித்து நீங்கள் ஆனந்தப்பட்டிருக்கிறீர்களோ?



13, 16, 19, 25, 31 மீடர் பாண்டுகளுக்கு பாண்டு ஸ்பெரெடிங்குகளுடன் கூடிய எட்டு வேவ் பாண்டுகள் உடையது.

●

மாஜிக் ஐ இல்லாமல் விலை ரூ. 495

# மார்க்கோனிபோன்

வால்வுகள், பிக்கப்புகள், (டோன் ஆமுடன்) லௌட் ஸ்பீக்கர்கள், வால்யூம் கண்ட்ரோல்கள் இவைகள் சகலமும் எங்களிடம் இப்போது கைவசமுள்ளன.

●

சென்னை ராஜதானிக்கு (சமஸ்தானங்கள் உள்பட) ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

## ஸ்ரீ ராம விலாஸ் ஸர்வீஸ் லிமிடெட்.,

202-203, மௌண்ட் ரோடு :: மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press,
...ms Garden, ...oonamallee High Road, Kilpauk, Madras